# மற்றவர்களை விட முன்னா லிருக்க வழி...

எதிர்காலத்திலும் இவளை முன்னாலிருக்கச் செய்யுங்கள். பணவசதி குறைவுகாரணமாக வாழ்க்கையில் இவள் முன்னேறுவது தடைப்படாமலிருக்க, இவளுக்கென்று தவறாமல் பணம் சேமித்து வாருங்கள்.

யூகோ பாங்கில் சேமியுங்கள், உங்கள் பணம் பெருகி உங்களுடைய அன்புக்குழந்தைகளின் இன்பகரமான எதிர் காலத்திற்கு உத்தரவாதம் அளிக்கும். நீங்கள் சிறு தொகையான ரூ 5/- க்கு யூகோ பாங்கில் ஒரு சேமிப்புக் கணக்குத் தொடங்க முடியும்.






தலைமை ஆபீஸ்:
கல்கத்தா

நீங்கள் பணம் சேமிக்கலாம்,
யுகோ பாங்க் உங்களுக்கு
உதவி செய்ய முடியும்.

# இரவிலே கடுமையாகும் இருமலை நிறுத்த அதிகச் சக்தி வாய்ந்த மருந்து!



இருமலைக் கட்டுப்படுத்தும் கேந்திரம் சிலிர்க்கிறது.



ஃபார்முலா 44 இருமலைக் கட்டுப்படுத்தும் கேந்திரத்திற்கு இதமளிக்கிறது.




இருமல் தொடங்கும் கட்டுப்பாட்டுக் கேந்திரத்திலேயே உடனடியாகவும், அதிகச் சக்தியுடனும் செயல் புரிகிறது விக்ஸ் ஃபார்முலா 44. எனவே உங்கள் இருமல் நின்று விடுகிறது.

அதேசமயம், இந்த நவீன இருமல் மிக்சரில் சேர்ந்துள்ள மருந்துப்பொருள்கள் உள்ளே ஊடுருவி, சுவாசக் குழாய்களின் அடைப்பை நீக்குகின்றன. வலிமிகுந்த மார்புச் சளியை அகற்றி தொண்டை எரிச்சலுக்கும் இதமளிக்கின்றன.

அதிகச் சக்தி வாய்ந்த விக்ஸ் ஃபார்முலா 44 அருந்தி இரவில் கடுமையாகும் இருமலிலிருந்து விரைவிலே நிச்சயமான நிவாரணம் பெறுங்கள். அயர்ந்த உறக்கமும் உங்களுக்குக் கிடைக்கும்.

**விக்ஸ் பார்முலா 44 காஃப் மிக்சர்**

HIR

## கல்கி
## பொருளடக்கம்



சௌமிய, புரட்டாசி 26 - 1969, அக்டோபர் 12



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


சவானின்
கவசம்
சரியோ
தப்போ
இந்திராவுக்கே
ஆதரவு
PK


பிரதமர் பதவி
சீ, சீ
இந்தப் பழம்
புளிக்கும்


சவான்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 ★ இதழ் 11

# வருந்தி அழைத்த அவமானம்

மொராக்கோவின் தலைநகராகிய ரபாட்டில் கூடிய முஸ்லிம் தேசங்களின் மகாநாட்டுக்கு நம்மை அழைக்க வைத்து அவமானத்தைத் தேடிக் கொண்டிருக்கிறோம். முதலில் நமக்கு அழைப்பு வரவில்லை. இந்திய நாட்டில் முஸ்லிம்கள் கணிசமாக இருப்பதால் நம்மையும் அழைத்தே தீரவேண்டும் என்று அரசாங்கம் வற்புறுத்தியது. வேண்டா வெறுப்பாக மகாநாட்டினர் அழைப்பை அனுப்பினார்கள். அவசரம் அவசரமாக யூனியன் தொழில் மந்திரி பக்ருதீன் அலி அகமது அவர்களின் தலைமையில் ஒரு தூதுகோஷ்டியை அனுப்பினோம். ஆனால் அங்கு நடவடிக்கைகளில் கலந்து கொள்ள முடியாதபடி நமது கோஷ்டியைத் தடை செய்து விட்டார்கள். இந்திய கோஷ்டியை அனுமதித்தால் தான் வெளியேறி விடுவதாக பாகிஸ்தான் பயமுறுத்தியது. துருக்கியும் ஈரானும் அதற்குப் பக்கவாத்தியம் வாசித்தன. மகாநாட்டுக்கு வராமல் தாமாகவே இந்தியக் கோஷ்டியினர் விலகி யிருக்க வேண்டுமென்று நிர்வாகிகள் கேட்டுப் பார்த்தார்கள். அதற்கு இணங்க அகமது மறுத்து விட்டார். அதன்பேரில் நமது தூது கோஷ்டியை விலக்கி வைப்பது என்று மகாநாட்டில் முடிவு செய்யப்பட்டது. அது மட்டுமல்ல; இந்தியக் கோஷ்டியினர் தங்கியிருந்த ஹோட்டலில் தண்ணீர் விநியோகம் நிறுத்தப்பட்டது. உணவு அளிப்பதிலும் சிரமம் ஏற்பட்டது. ஊரை விட்டு வெளியே வந்தால் போதும் என்ற நிலைமை ஏற்பட்டது.

நமது சர்க்காரே வருந்தி அழைத்த துன்பம் இது. இம்மாதிரி ஓர் அவமானம் ஏற்பட்டதைக் குறித்துத் தேசமனைத்துமே கொதிப்படைந்திருக்கிறது. நாம் மிகவும் நம்பியிருந்த அரபு நாடுகள் கூடக் காலை வாரிவிட்டன. எனவே நமது அயல் நாட்டுக் கொள்கைகள் அனைத்தையும் சர்க்கார் மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்ற கோரிக்கை கிளம்பி யிருக்கிறது. அம்மாதிரி பரிசீலனை நடைபெற்று, கொள்கை மாறுமாயின் நல்லதுதான்.

இஸ்ரேலுக்கு எதிராக அரபுநாடுகளுடன் இணைந்திருப்பதுதான் இந்தியாவின் கொள்கையாக இருந்து வருகிறது. நம்மை அடுத்தாற்போல் உள்ள பாகிஸ்தானுக்கு எதிராக இந்தியாவுக்கு அரபு நாடுகள் துணை புரியும் என்ற நம்பிக்கையை இப்போதைய கொள்கை அடிப்படையாகக் கொண்டது. இது பயனற்ற கொள்கை என்பது ரபாட் மகாநாட்டில் தெரிந்து விட்டது. இதன் விளைவாக விவேகம் பிறந்து கொள்கை மாறக் கூடுமாயின் அது நம் நல்லதிருஷ்டமே.

தீவிர மதாபிமான அடிப்படையில் செயலாற்றி வரும் தேசங்களிடையே பிளவு ஏற்படுத்த முடியும் என நினைப்பது பெருந் தவறு. யூதர்கள் தமது தாயகத்தைத் தமக்கென மீட்டு அங்கு வசித்து வருகின்றனர். அவர்களை வெளியேற்ற விரும்பும் எந்தக் கொள்கையும் நியாயம் ஆகாது. பாகிஸ்தான் காட்டி வரும் பகைமை உணர்ச்சிக்குத் தீர்வு காண ஒரே ஒரு வழிதான் உண்டு. பகைமையைத் தவிர்த்து நட்புறவை வளர்க்கின்ற ராஜபாட்டையில் போக வேண்டும். இஸ்ரேலுக்கு அநீதி இழைப்பதன் மூலம் பாகிஸ்தான் பிரச்னைக்குத் தீர்வு காண முடியாது.

எந்த தேசத்துக்கும் நிரந்தரமான பகைவர்களோ, நிரந்தரமான நண்பர்களோ கிடையாது. நிரந்தரமான நலன்கள்தாம் உண்டு. அவற்றை உறுதி செய்வதுதான் அயல்நாட்டுக் கொள்கையின் பிரதான நோக்கமாக இருக்க வேண்டும். நமது தேசிய நலன்கள் எவை என்பதைப் பற்றி நமது சர்க்காருக்கு முதலில் தெளிவு ஏற்பட வேண்டும். அப்போதுதான் எந்தக் கொள்கையால் நன்மை விளையும் என்பதைக் கண்டறிவது சுலபமாக இருக்கும்.

# என்ன சேதி?

## வர்த்தக சங்கத் தலைவர்

தென் இந்திய தொழில் வர்த்தக சங்கத்தின் 1969 — 70 வருஷத்திய தலைவராகத் திருவாளர் பி. மருதபிள்ளை தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்பதில் மகிழ்ச்சியடைகிறோம். திரு மருதபிள்ளை அவர்கள் செஞ்சுரி மாவு மில், அருணா சர்க்கரை தொழிற்சாலை ஆகியவற்றின் நிர்வாக டைரக்டர்; தென் இந்திய சர்க்கரை ஆலைகள் சங்கத்தின் உப தலைவர்; தென் இந்திய மாவு மில்கள் சங்கத்தின் தலைவர்; செஞ்சிலுவை சங்கத்தின் உப தலைவர். இப்படிப் பல சங்கங்களில் முக்கிய பொறுப்பு வகித்து அநுபவம் பெற்ற மருதபிள்ளை, ராஜ்ய சர்க்கார், மத்திய சர்க்கார் ஆகியவை தொழில் — வர்த்தக உலகில் அநாவசியமாக நுழையும்போது, அதனைத் திரமாகக் கண்டிப்பார் என்று எதிர்பார்க்கிறோம்.

திரு எம். ஏ. எம். ராமசாமி அவர்களும், திரு எஸ். நாராயணசாமி அவர்களும் தொழில் வர்த்தக சங்கத்தின் உப தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதை அறிந்து பாராட்டுகிறோம்.

## ஏ. பி. ஸி.யின் புதுத் தலைவர்

விளம்பரதாரர்களின் பத்திரிகை விநியோகத்தைக் கணிக்கும் ஆடிட் பீரோ ஆப் ஸர்குலேஷன் (ஏபிஸி) என்ற ஸ்தாபனத்தின் 1969—70 வருஷத்திய தலைவராக, இலங்கை லீவர் பிரதர்ஸ் நிறுவனத்தின் மார்க்கெட்டிங் டைரக்டராகப் பணியாற்றி வரும் திரு லியனார்டு ஸ்டான்லி ஜயவர்த்தனா அவர்கள் நியமனம் பெற்றிருக்கிறார். பத்திரிகைகளின் விநியோகக் கணக்கு, எந்த வகைய வாசகர்களைப் பெற்றிருக்கிறது என்பதை யெல்லாம் ஆராய்ந்து, பொருள்களை விளம்பரம் செய்ய விரும்பும் தொழில் வர்த்தக நிலையங்களுக்கு ஆலோசனை கூற ஏற்பட்டது இந்த ஏ. பி. ஸி. ஸ்தாபனம். இந்த ஸ்தாபனத்தின் குறிக்கோளைச் சென்ற மூன்றாண்டுகளாக இலங்கையில் பரப்பி அருந்தொண்டாற்றி யிருக்கிறார் திரு ஜயவர்த்தனா. அப்படிப்பட்டவர் இப்போது தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது மிகப் பொருத்தமே. மேலும் ஓர் இலங்கையர் இந்த உயர் பதவிக்கு நியமிக்கப்பட்டிருப்பது இதுவே முதன் முறை.

ஏ.பி.ஸி.க்குத் தலைவராக வந்துள்ள திரு ஜயவர்த்தனாவுக்கு நல் வாழ்த்துக்கள்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

காந்தி நூற்றாண்டு விழாத் தருணத்தில் நடைபெற்றுள்ள பெரிய நிகழ்ச்சி ஸ்ரீ மொரார்ஜி தேசாயும், ஸ்ரீ இந்துலால் யாக்ஞிக்கும் மேற்கொண்ட உண்ணாவிரதம். ஆமதாபாத்தில் தலை தூக்கிய பயங்கரமான பலாத்காரச் செயல்கள் நூற்றாண்டு விழாவை மாசுபடுத்தி விட்டன. அந்தப் பயங்கரத்தை நிறுத்துவதற்காக அவர்கள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டனர். இந்த இருவரும் பழம் பெரும் தலைவர்கள். தமது உண்ணாவிரதத்தின் மூலம் சூழ்நிலையை அவர்கள் தூய்மைப் படுத்தினர். வேறு எந்த முயற்சியும் இவ்வளவு நற்பலனை அளித்திருக்காது. குஜராத்தில் திடீரெனக் கட்டுப்படுத்த முடியாதவாறு ஏற்பட்ட அறிவுக் குழப்பத்தை விரைவில் மறந்துவிடுவது எல்லோருக்குமே நல்லது.

★

அரசுடைமை ஆக்கியதால் பாங்குகளின் டெபாஸிட்டுகள் விவசாயத்துக்கும், சிறு தொழில்களுக்கும் அதிகமாகப் பயனாக வேண்டும் என்பது தவிர, அரசியல் நோக்கத்தில் ஏதுவும் செய்யப்பட மாட்டாது என்று பிரதமர் உறுதி கூறியுள்ளார். இது சிலரைத் திருப்தி செய்யலாம். ஆனால்

# ராஜாஜியின் செய்தி

ஈச்வரன் கிருபையால் சுருதி சாகரம் அனந்தராம தீக்ஷிதர் அவர்களின் உடல்நிலை கவலைக்கு இடமில்லாமல் சொஸ்தப்பட்டு வருகிறது. வைத்தியர்களுடைய கவனத்தினாலும், துணையாய்ச் சேவை செய்து வரும் நர்ஸ்களின் உழைப்பினாலும், எல்லாவற்றுக்கும் மேலாக ஆயிரக்கணக்கான மக்களின் பிரார்த்தனையின் பயனாகவும் ஆரோக்கியநிலை ஏற்பட்டு வருகிறது. கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க வேண்டுமானால் குடமும் குடத்தை இழுக்கும் கயிறும் இல்லாமல் முடியாது. எல்லாவற்றையும்விட கிணற்றில் நீர் இருக்க வேண்டும். கிணற்று நீரே ஈச்வரன் கிருபை.

இந்தத் திருப்தியில் முக்கிய அம்சத்தைக் காணாமல் போய் விடுவோம். டிபாஸிட்தாரர்களிடம் விசுவாச ஒப்பந்தம் செய்து கொண்ட அடிப்படையிலேயே பாங்கில் டெபாஸிட்கள் நிர்வகிக்கப்படுகின்றன. இந்த விசுவாச ஒப்பந்தத்தை அரசுடைமையால் மாற்ற முடியாது. கடனைத் திருப்பித் தரக் கூடியவர்கள் என்று நூற்றுக்கு நூறு நம்பகமானவர்களைத் தவிர மற்றவர்களுக்குக் கடன் தருவதால் டிபாஸிட்தாரர்களின் உரிமைக்கு ஊறு உண்டாக்கி விடலாகாது.

பாங்குகளின் அரசுடைமைச் சட்டம் அரசியல் சாஸனத்துக்கு இசைவானது என ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பு அளிக்கிறது என்றே வைத்துக் கொள்வோம். அப்போதும், அதாவது இன்றைய பாங்கி நிர்வாகிகள் மாறினாலும், டெபாஸிட்தாரர்களுக்குப் பாங்குகள் ஆற்ற வேண்டிய கடமையை அரசாங்கம் உத்தரவாதம் கூறிக் காத்தேயாக வேண்டும்.

வெவ்வேறு சர்க்கார்கள் அமையும்போது, அவை தேச நலன் என்பதாக வெவ்வேறு அம்சங்களைக் கருதி, பாங்குப் பணத்தைப் பிரயோகப்படுத்துவதில் வெவ்வேறு இனங்களை முக்கியமாக எண்ணக் கூடும். ஆயினும் அரசியல் சாஸனம் அடிப்படையாகச் சொத்துரிமைக்குக் காப்புத் தருகிறது. ஒப்பந்தங்களின் மூலம் பண விஷயமாகத் தருகிற உரிமையும் சொத்துரிமையைச் சேர்ந்ததே. இதைச் சர்க்காரின் அரசியல் ரீதியான மாறுதல்கள் பாதிப்பதற்கில்லை.

டெபாஸிட் வேறு, கடன் வேறு. கடன் பணமானது கடன் வாங்குபவருடைய சொத்தாகி விடுகிறது. ஆனால் டெபாஸிட்கள் பாங்கின் சொத்தாகவில்லை. அவை பாங்கில் 'வைக்க'ப்பட்டிருக்கின்றன; அவ்வளவே. அவற்றைக் கடன் வாங்கிய பணம் போல் பாங்குகள் செலவழிக்க முடியாது.

✶

ஒரு மனிதரைப் பூரணமாக எடுத்துக் கொண்டாலொழியப் புரிந்துகொள்ள முடியாது. இது காந்திஜி விஷயத்தில் மிகவும் பொருந்தும். அவர் பல அம்சங்களும் ஒருசேராக ஒன்றிய வியக்தி. அவரை அங்க — அங்கமாகப் பார்த்துப் புரிந்து கொண்டதாகக் கற்பனை செய்வது தகாது.

காந்திஜி பல சந்தர்ப்பங்களில் கூறிய, எழுதிய விஷயங்களை, அச்சந்தர்ப்பங்களிலிருந்து தனியே பிரித்து எடுத்து அவை வேத வாக்குப் போல் சர்ச்சைக்கு அப்பாற்பட்டவை என்று வலியுறுத்துவது தவறு என ஸ்ரீமதி இந்திரா காந்தி கூறியுள்ளார். அவரது ஆட்சேபனை நியாயமானது. காந்தி நூற்றாண்டில் இது ஒரு தொழிலாகி விட்டது என அவர் பரிகசித்துக் கூறியிருக்கிறார். 'காந்திஜி இறுக்கமான கோட்பாடுகளைப் பிடித்துக் கொண்டிருந்தவர் அல்ல; அவர் சந்தர்ப்பங்களுக்கேற்பக் கருத்துக்கள் நெகிழ்ந்து கொடுப்பவையாக இருக்க வேண்டுமென எண்ணியவர்' என்று ஸ்ரீமதி இந்திரா கூறியுள்ளார். இதற்கு அவர் மேற்கோள் காட்டவில்லை. ஆயினும் நாம் ஒரு மேற்கோள் பார்க்கலாம். சிறந்த அஹிம்சாவாதியான காந்திஜி, கன்றுக்குட்டி ஒன்று சித்திரவதைப்பட்ட போது, அதனுடைய துன்பம் தீர்வதற்காகவே அதைக் கொன்று விட அனுமதி தந்தார்.

விட்டுக் கொடுக்காத தன்மை அரசியல் விவேகமாகாது. காந்தீயத் தத்துவங்களுக்கு மட்டும் இன்றி, சோஷலிஸ, கம்யூனிஸக் கோட்பாடுகளுக்கும், இதர கொள்கைகளுக்கும்கூட இது பொருந்தும். அடிப்படையாக ஒன்றில் மட்டும் உறுதியான பிடிப்பு வேண்டும். வன்முறை தோல்வியடையும்; அன்பே வெல்லும் என்பதுதான் அந்த அடிப்படைத் தத்துவம். அன்பின் சக்திக்கு எல்லையே இல்லை என்றார் காந்திஜி.

சந்தர்ப்பத்திலிருந்து பிரித்தெடுத்துக் காந்திஜியின் மேற்கோளைக் காட்டுவதன் அபாயத்துக்கு ஓர் உதாரணம்: பணக்காரர்கள் தமது சொத்தைத் தர்மகர்த்தர் போல் மக்கள் நலனுக்காகவே பரிபாலிக்க வேண்டும் என்றார் காந்திஜி. அதே சமயத்தில் சொத்துக்கு உரியவர்தான் இவ்வித தர்மகர்த்தராக இருக்க வேண்டுமே அன்றி, அரசாங்கம் இந்தப் பொறுப்பை ஏற்க வேண்டுமென அவர் கூறவில்லை. இந்தத் தர்மகர்த்தாக் கொள்கையைச் சுயநலம் படைத்த பணக்காரர்கள் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளாவிடில், அவர்களது சொத்து பலாத்காரமாகப் பறிமுதல் செய்யப்படுவதிலேயே முடியும் என்றார். தர்மகர்த்தா முறையைப் பணக்காரர்கள் சுயேச்சையாக ஏற்கச் செய்வதற்காகத்தான் அவர் இவ்விதம் கூறினாரே அன்றி, இதனால் பணக்காரர்களின் சொத்தைப் பறிமுதல் செய்வதற்கு அவர் அனுமதியும் ஆசியும் தந்ததாக ஆகாது. ஆனால் சந்தர்ப்பத்தை விளக்காமல் மேற்கோளைக் கையாண்டால் தப்பு அபிப்பிராயம் ஏற்படும்.

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

## அத்தியாயம் ஐம்பத்துமூன்று

## அபய கீதம்

இளவரசர் அருள்மொழிவர்மர் பார்த்திபேந்திரனுடைய கப்பலுக்குப் போய்ச் சேரும் வரையில், தொண்டைமான் நதியின் முகத்துவாரத்தில் நின்றவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கப்பலில் இளவரசர் ஏறிக் கொண்டவுடனே அவரை ஏற்றிச் சென்ற படகு திரும்பியது.

சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி குதூகலம் அடைந்திருந்தார் என்று அவருடைய முகக் குறி காட்டியது.

'' ஆண்டவன் நம் கட்சியில் இருக்கிறார் ; சந்தேகமில்லை. இளவரசரின் திருமேனியில் உள்ள சங்கு சக்கர சின்னங்கள் பழுதாகப் போய் விடுமா ? பார்த்திபேந்திரன் அவரைப் பத்திரமாகக் காஞ்சிக்குக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவான். நாமும் நம் படைகளுடன் தஞ்சையை நோக்கிப் புறப்பட வேண்டியதுதான்!'' என்று தமக்குத் தாமே சொல்லுகிறவர் போல் கொடும்பாளூர் வேளார் உரத்துச் சொல்லிக் கொண்டார்.

உடனே பக்கத்தில் நின்ற ஆழ்வார்க்கடியானைப் பார்த்தார்.

''வைஷ்ணவனே ! நீ இங்கு நிற்கிறாயா? அதனால் பாதகம் இல்லை. முதன் மந்திரியின் அந்தரங்க ஒற்றனுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? சரி, நீ என்ன செய்யப் போகிறாய்? மாதோட்டத்துக்கு என்னுடன் வரப் போகிறாயா?'' என்று கேட்டார்.

''இல்லை, ஐயா ! முதன் மந்திரி எனக்கு இட்ட இன்னும் ஒரு வேலை நான் செய்ய வேண்டியிருக்கிறது.....''

''அது என்ன, அப்பா ?''

ஆழ்வார்க்கடியான் சற்றுத் தூரத்தில் ஊமை ராணியும் பூங்குழலியும் நின்ற இடத்தை நோக்கினான்.

''அந்தப் பெண்களைப் பற்றிய விஷயமா?'' என்றார் சேநாதிபதி.

''அவர்களில் ஒருவரைப் பற்றியது தான். இலங்கையில் இத்தகைய ஊமை ஸ்திரீ ஒருத்தியைப் பார்க்க நேர்ந்தால் அவளை எப்படியாவது தஞ்சாவூருக்கு அழைத்து வரும்படி முதன் மந்திரி கட்டளையிட்டிருக்கிறார்.''

''நல்ல வேலை உனக்குக் கொடுத்தார். அதைக் காட்டிலும் இலங்கைக் கடல்களில் அடிக்கும் புயற்காற்றுகளில் ஒன்றைப் பிடித்துக் கொண்டு வரும்படி உனக்குச் சொல்லியிருக்கலாம். அந்த ஊமை ஸ்திரீயைப் பிடித்துக் கொண்டு போவது அவ்வளவு சுலபமாயிருக்கும். அவள் யாரோ தெரியவில்லை. நம் இளவரசரிடம் மிக்க அபிமானம் வைத்திருக்கிறாள். உனக்கு ஏதாவது அவளைப் பற்றித் தெரியுமா?''

''அவள் ஊமை என்பதும் பிறவிச் செவிடு என்பதும் தெரியும். அவளை அழைத்துச் செல்வதைக் காட்டிலும் புயற் காற்றைக் கூண்டில் அடைத்துக் கொண்டு போவது சுலபம் என்றும் தெரியும். ஆயினும் என் எஜமானர் சொல்லியிருக்கிறபடியால் ஒரு பிரயத்தனம் செய்து பார்ப்பேன்.''

''இந்த ஓடக்காரப் பெண்ணுக்கும் அவளுக்கும்கூடச் சிநேகம் போலிருக்கிறது. இரண்டு பேரும் ஜாடைகளினால் பேசிக் கொள்வதைப் பார்! அந்தப் பெண்ணை இங்கே கூப்பிடு! அவளுக்கு ஓர் எச்சரிக்கை செய்ய வேண்டும்!....''



ஆழ்வார்க்கடியான் அந்தப் பெண்களின் அருகில் சென்று பூங்குழலியிடம் சேநாதிபதி அழைப்பதைக் கூறினான். பூங்குழலி ஊமை ராணியை விட்டுப் பிரிந்து சேநாதிபதியை அணுகினாள்.

''இதோ பார், பெண்ணே! நீ வெகு புத்திசாலி! நல்ல சமயத்தில் வந்து முக்கியமான செய்தி சொன்னாய். சோழ குலத்துக்குப் பெரிய உதவி செய்தாய். இதை நான் என்றும் மறக்கமாட்டேன். தக்க சமயத்தில் தகுந்த பரிசில் கொடுப்பேன்!'' என்றார்.

பூங்குழலி, ''வந்தனம், ஐயா! எனக்குப் பரிசில் எதுவும் தேவையில்லை'' என்று பணிவுடன் சொன்னாள்.

''தேவையில்லை என்றால் யார் விடுகிறார்கள்? இந்தக் குழப்பமெல்லாம் கொஞ்சம் அடங்கட்டும். பிறகு, பிறகு.... சோழ நாட்டுச் சைன்யத்தில் வீராதி வீரனைப் பார்த்து உனக்குத் திருமணம் செய்து வைக்கிறேன். உனக்கு வாய்க்கின்ற கணவன் அற்ப சொற்பமானவனாயிருந்தால் போதாது. பீமசேனனாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவனைக் கண்ணிலே விரலைக் கொடுத்து ஆட்டி வைத்துவிட மாட்டாயா?'' என்று சேநாதிபதி கூறிப் புன்னகை புரிந்தார்.

பூங்குழலி தரையைப் பார்த்தபடி நின்றாள். அவள் உள்ளத்தில் கோபம் பொங்கியது. ஆனால் அதை அச்சமயம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. இந்த முரட்டுக் கிழவரிடம் சண்டை பிடிப்பதில் பயன் என்ன? கோபத்தை அடக்கிக் கொள்ள முயன்றாள்,

''ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள்! இளவரசருக்கு ஏதோ உதவி செய்து விட்ட படியால், அவர் பேரில் பாத்தி

யதை கொண்டாடலாம் என்று எண்ணாதே! கடலில் வலைபோட்டு மீன்பிடிப்பதோடு நிறுத்திக் கொள்! இளவரசரை வலை போட்டுப் பிடிக்கலாம் என்று ஆசைப்படாதே! ஜாக்கிரதை, பெண்ணே! இனி அவர் அருகில் நெருங்கினாலும் உனக்கு ஆபத்து வரும்!'' என்றார் சேநாதிபதி. அவருடைய குரல் அப்போது மிகக் கடுமையாயிருந்தது. அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் காய்ச்சிய ஈயத் துளியை விடுவது போல் பூங்குழலியின் காதில் விழுந்தது.

அந்தக் கிழவனாருக்குப் பதிலுக்குப் பதில் காரசாரமான வார்த்தைகளைச் சொல்ல வேண்டும் என்று பூங்குழலி விரும்பினாள். ஆனால் பேச இயலவில்லை. தொண்டையை அடைத்தது. காதில் விழுந்த காய்ச்சிய ஈயத் துளிகள் கண் வழியாக வெளிவந்தன போல் வெப்பமான கண்ணீர்த் துளிகள் தோன்றிக் கண்களை எரியச் செய்தன.

குனிந்த தலை நிமிராமல் பூங்குழலி திரும்பினாள். கடற்கரைக்கு எதிர்ப்பக்கம் நோக்கி நடந்தாள்.



நடை மெதுவாக ஆரம்பமாயிற்று. வர வர வேகம் அதிகரித்தது. ஊமை ராணி இருந்த திசையை ஒரு கணம் கடைக் கண்ணால் பார்த்தாள். அவள் அருகில் ஆழ்வார்க்கடியான் நின்று ஏதோ அவ விடம் தெரிவிக்க முயன்று கொண் டிருப்பதைக் கண்டாள். மனிதர்கள் உள்ள இடத்திலேயே தான் இருக்கக் கூடாது என்ற எண்ணம் அவளுக்குத் தோன்றியது. மனிதக் குரலையே கேட்கப் பிடிக்கவில்லை. ஆ! மனிதர்கள் எத்தனை கொடூரமானவர்கள்? எதற்காக இவ்வளவு குரூரமான சொற்களைப் பேசு கிறார்கள்! எல்லோரும் ஊமைகளாகவே இருந்து விட்டால் எவ்வளவு நன்றா யிருக்கும்?

சிறிது தூரம் காட்டில் புகுந்து சென்ற பிறகு தொண்டைமானாற்றின் கரையை அடைந்தாள். அந்தக் கரை யோடு உள்நாட்டை நோக்கி நடந் தாள். அவளுடைய படகை விட் டிருந்த இடத்தைக் குறி வைத்து நடந்தாள். ஆம்; சீக்கிரம் அந்தப் படகைப் போய்ச் சேர வேண்டும். படகில் ஏறிக் கொள்ள வேண்டும். தன்னந் தனியாகக் கடலில் செல்ல வேண்டும். மனிதர்களுடைய குரல் காதில் விழ முடியாத நடுக் கட லுக்கே போய்விட வேண்டும். துடுப் பைச் சும்மா வைத்துவிட வேண்டும். அலைகளில் மொத்துண்டு படகு மிதந்து மிதந்து போக வேண்டும். தானும் அதில் போய்க் கொண்டிருக்க வேண் டும். எல்லையில்லாத கடலில் முடிவில் லாமல் போய்க் கொண்டிருக்க வேண் டும். அப்போதுதான் அலைப்பட்ட தன் உள்ளம் அமைதி பெறும். சேநாதிபதி யின் வார்த்தைகளினால் நொந்த உள் ளத்தின் வேதனை தீரும். ஆத்திரம் தணிந்து ஆறுதல் உண்டாகும். அந் தப் பொல்லாத கிழவன் என்ன சொன் னான்! "வலை போட்டுக் கடலில் மீன் பிடிப்பதோடு நிறுத்திக் கொள்! இள வரசருக்கு வலை போடாதே!" என் றான். நானா இளவரசருக்கு வலை போடு கிறேன்! ச்சீ! அந்தக் கிழவனின் புத்தி போன போக்கைப் பார்....! ஆம்; தரையில் வாழும் மனிதர்களைக் காட்டிலும் கடலில் வாழும் மீன்கள் எவ்வளவோ நல்ல ஜந்துக்கள். அவை இப்படியெல்லாம் கொடூரமாகப் பேசுவ தில்லை. ஆழ்கடலில் நீந்தியும் மிதந்தும் எவ்வளவு ஆனந்தமாகக் காலம் கழிக் கின்றன! அவற்றுக்குக் கவலை ஏது? துய ரம் ஏது? ஆகா! நான் கடலில் வாழும் மீனாகப் பிறந்திருக்கக் கூடாதா? நானும் மீனாகப் பிறந்து, இளவரசரும் மீனாகப் பிறந்திருக்கக் கூடாதா? அப்ப டிப் பிறந்திருந்தால், இந்த உலகத்தின் துயரங்கள், துவேஷங்கள், ஆசாபா சங்கள், கோபதாபங்கள், — இவற்றில் அகப்பட்டுக் கொள்ளாமல் சதா சர்வ காலமும் ஆழ்கடலில் நீந்தி நீந்திப் போய்க் கொண்டிருக்கலாம் அல்லவா? அப்போது தன்னையும் இளவரசரையும் பிரிப்பதற்கோ, வஞ்சகம் செய்வ தற்கோ, விஷமமாகப் பேசுவதற்கோ யாரும் இருக்க மாட்டார்கள் அல்லவா? இல்லை, இல்லை! அதுவும் நிச்சயமில்லை. அங்கேயும் இந்தப் பொல்லாத மனி தர்கள் வந்து வலை போட்டுப் பிடித்துக் கொண்டு போகப் பார்ப்பார்கள்! இரண்டு மீன்களில் ஒன்றை மட்டும் கொண்டு போனாலும் போவார்கள்! பாதகர்கள்!....

பூங்குழலியின் மனத்தில் பொங்கிய ஆத்திரம் அவளுடைய கால்களுக்கு அளவில்லாத விரைவைக் கொடுத்தது. சூரியன் உச்சி வானுக்கு வந்த சமயம் அவள் படகை விட்டிருந்த இடத்தை அடைந்து விட்டாள். நல்ல வேளை; படகு விட்டிருந்த இடத்தில் கட்டிப் போட்டபடியே இருந்தது. அவளுடைய ஆருயிர்த் தோழி அந்தப் படகுதான். அவளுடைய அடைக்கல ஸ்தானம் அந்தப் படகுதான். துன்பமும் துரோக மும் சூழ்ந்த இந்தப் பொல்லாத உல கத்தில் தனக்கு அமைதியும் ஆனந்த மும் அளிப்பது அந்தச் சாண் அகலத் துப் படகுதான். அதை யாரும் அடித் துக் கொண்டு போகாமல் விட்டு வைத் தது பெரிய காரியம். இனி எது எப்படி யாவது போகட்டும். இளவரசரை அந்தக் கிழச் சேநாதிபதியே காவல் புரியட்டும். கொடும்பாளூர் வீட்டுப் பெண்ணையே அவர் கழுத்தில் கட்டி விடட்டும். அதனால் எனக்கு என்ன? என் படகு இருக்கிறது; துடுப்பு இருக் கிறது; கையில் வலிவு இருக்கிறது; விசாலமான கடலும் இருக்கிறது. சமுத் திர ராஜனே! உன் அருமைப் புதல்வியை வேறு யார் கைவிட்டாலும் நீ கைவிட மாட்டாய் அல்லவா? "சமுத்திர குமாரி" என்று இளவரசர் திருவாயி னால் கூறியதைப் பொய்யாக்க மாட் டாய் அல்லவா?

பூங்குழலி படகில் ஏறிக் கொண் டாள். கடலை நோக்கிப் படகைச் செலுத்தினாள். நதியின் ஓட்டத்தோடு சென்றபடியால் சீக்கிரத்திலேயே தொண்டைமானாற்றின் முகத்துவா ரத்தை அடைந்து விட்டாள். பின்னர் கடலில் படகைச் செலுத்தினாள். சிறிது நேரத்துக்கெல்லாம் சுழிக் காற்று அடிக்கப் போகிறது என்று அவளுக்குத்

## ஒலியைவிட வேகம்!

நீங்கள் இந்தியாவை விட்டு (டில்லியிலிருந்து) புறப்பட்ட அதே நேரத்தில் மாஸ்கோவை அடைய முடியுமா? சோதனை ஓட்டத்தில் வெற்றி கண்டுள்ள டி.யு.144 என்ற ரஷ்ய விமானம் நடைமுறைக்கு வந்து விட்டால் இது முடியும். மணிக்கு 1500 மைல் வீதம் செல்லும் இந்த விமானம் மாஸ்கோவை அடைவதற்கு இரண்டு தலைநகரங்களுக்கும் இடையேயுள்ள நேர வித்தியாசமான இரண்டரை மணி நேரம் போதும். உதாரணத்துக்குப் பகல் பன்னிரண்டு மணிக்கு அது டில்லியை விட்டுப் புறப்பட்டால் அது மாஸ்கோவை அடையும்போது அங்கும் மணி பன்னிரண்டுதான் ஆகியிருக்கும்.

''சோவியத் நாடு'' -தகவல் : மு. இரவீந்திரன்



தெரிந்து போயிற்று. சுழிக் காற்றின் முன் அறிகுறிகளை அவள் நன்கு அறிந்திருந்தாள். முதல் நாள் இரவு சந்திரனைச் சுற்றிச் சாம்பல் நிற வட்டம் காணப்பட்டது. இன்றைக்குப் பகலெல்லாம் ஒரே புழுக்கமாயிருந்தது. மரங்களில் இலை அசையவில்லை. அதோ தென் மேற்கு மூலையில் கரிய மேகத் திட்டுக்கள் கிளம்பிவிட்டன. சீக்கிரத்தில் சுழிக் காற்று அடிக்கப் போவது நிச்சயம். கடலின் கொந்தளிப்பு அற்புதக் காட்சியாயிருக்கும். ஆனால் சுழிக் காற்று அடிக்கும் போது கடலில் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. பூதத் தீவுக்குப் போய்த் தங்கியிருப்பது நல்லது. அங்கே தங்கியிருந்தால் சுழிக் காற்றினால் கடலிலே உண்டாகும் அல்லோல கல்லோலத்தை நன்றாய்ப் பார்த்துக் களிக்கலாம். காற்று அடித்து விட்டுப் போன பிறகு, கடலிலும் கொந்தளிப்புச் சிறிது அடங்கிய பிறகு, படகைக் கடலில் செலுத்திக் கொண்டு கோடிக் கரைக்குப் போகலாம். இப்போது என்ன அவசரம்? கோடிக் கரைக்கு இப்போது அந்த மரக்கலம் அநேகமாகப் போயிருக்கும். நல்ல வேளை! சுழிக் காற்றில் அது அகப்பட்டுக் கொண்டிராது. இளவரசர் இத்தனை நேரம் பத்திரமாகப் போய் அங்கே இறங்கியிருப்பார். அல்லது ஒரு வேளை மாமல்லபுரத்துக்கே போயிருந்தாலும் போயிருப்பார். எங்கே போயிருந்தால் நமக்கு என்ன? சுழிக் காற்றில் அகப்பட்டுக் கொண்டிருக்க மாட்டார்; அந்தவரைக்கும் திருப்தி அடையலாம்.

சுழிக் காற்று தொடங்குவதற்கு முன்னால் அடியோடு காற்று நின்று போயிருந்தபடியால் மரக்கலங்கள் பாய் விரித்திருந்தும் கடலில் போக முடியவில்லை என்பது பூங்குழலிக்குத் தெரியாது. ஆகையால் இத்தனை நேரம் அக்கரை போய்ச் சேர்ந்திருக்கும் என்றே நினைத்தாள். சேநாதிபதி, ''இளவரசருக்கு வலை போடாதே!'' என்று சொன்னது அடிக்கடி அவளுடைய மனத்தில் தோன்றித் துன்புறுத்திக் கொண்டிருந்தது. ஆகையால், கோடிக்கரைக்குத் தானும் உடனே போக வேண்டாம் என்று எண்ணினாள். பூதத் தீவிலே தங்கியிருந்து, சுழிக் காற்றின் அட்டகாசங்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு சாவகாசமாகப் புறப்படத் தீர்மானித்தாள்.

தொண்டைமானாற்றின் முகத்துவாரத்திலிருந்து பூதத் தீவு அதிக தூரத்தில் இல்லை. ஆகையால் புறப்பட்ட ஒரு நாழிகை நேரத்துக்குள் அங்கே போய்ச் சேர்ந்து விட்டாள்.

பூங்குழலி பூதத் தீவைச் சேர்ந்ததற்கும் சுழிக் காற்று அடிக்கத் தொடங்கியதற்கும் சரியாயிருந்தது.

படகைக் கரையில் ஏற்றிக் குப்புறக் கவிழ்த்துப் பத்திரமாய்க் கட்டிப் போட்டு விட்டுப் பூங்குழலி அத்தீவில் இருந்த ஒரு சிறிய புத்த ஸ்தூபத்தை

அடைந்தாள். முதலில் சற்று நேரம் அதன் அடிவாரத்துக் குகை அறையில் காற்றிலும் மழையிலும் அடிபடா திருந்து பார்த்தாள். அதிக நேரம் அவ ளால் அப்படி இருக்க முடியவில்லை. வாயு பகவானின் கோலாகலத் திருவிளை யாடல்களைப் பார்க்கும் ஆசை உண்டா யிற்று. குகையிலிருந்து வெளி வந்து படிக்கட்டில் ஏறி ஸ்தூபத்தின் உச்சியை அடைந்தாள். அப்போது சுற்றுப்புறத் துச் சூழ்நிலை அவள் உள்ளத்தின் நிலைக்கு ஒத்ததாக இருந்தது. பூதத் தீவில் ஓங்கி வளர்ந்திருந்த நூற்றுக் கணக்கான தென்னை மரங்கள் தலைவிரிகோலமாக ஊழிக்காலத்தில் சம்ஹார மூர்த்தியைச் சுற்றி நின்று பூதகணங்கள் ஆடுவது போல் ஆடின. கடல் அலைகள் அத் தென்னை மரங்களின் உயரம் சில சமயம் எழும்பி இமய மலையின் பனிச் சிகரங் களைப் போல் ஒரு விநாடி காட்சி அளித்து மறு விநாடி நூறு கோடி நுரைத் துளிகளாகச் சிதறி விழுந்தன. சுழன்று சுழன்று அடித்த காற்றின் சத்தமும் அக்காற்றில் சுழன்று ஆடிய மரக் கிளைகளின் சத்தமும் அலைகளின் பேரொலியும் இடையிடையே கேட்ட இடி முழக்கமும் சேர்ந்து திக்குத் திகாந் தங்கள் எல்லாம் இடிந்து தகர்ந்து விழுகின்றன என்று எண்ணச் செய் தன. வானத்தை வெட்டிப் பிளப்பது போல் அவ்வப்போது தோன்றிக் கப்பும் கிளையும் விட்டுப் படர்ந்து ஓடி மறைந்த மின்னல்கள் ஒரு விநாடி நேரம் கொந் தளித்த அலைகடலையும், பேயாட்டம் ஆடிய மரங்களையும், வெளிச்சம் போட் டுக் காட்டிவிட்டு மறுவிநாடி கன்னங் கரிய காரிருளில் ஆழச் செய்தன.

இவ்வளவு அல்லோல கல்லோலங் களையும் பார்த்துக் கொண்டு பூங் குழலி வெகு நேரம் நின்றாள். அவள் உடம்பு காற்றில் ஆடிய மரங்களைப் போல் ஆடியது. அவள் கூந்தல் அவிழ்ந்து காற்றில் பறந்தது. மழை அவள் உடலை நனைத்தது. இடிமுழக்கம் அவள் செவிகளைப் பிளந்தது.;மின்வெட்டு அவள் கண்களைப் பறித்தது. இதையெல் லாம் அவள் பொருட் படுத்தவேயில்லை. வெகு நேரம் அக்காற்றிலும் மழையி லும் அவள் நின்றாள். அவள் உள்ளம் வெறி கொண்டு கொந்தளித்தது. தன் னைச் சுற்றிலும் நடைபெறும் அற்புத கோலாகலமெல்லாம் தான் பார்த்துக் களிப்பதற்காகவே நடப்பதாக எண் ணிப் பெருமிதத்துடன் அநுபவித்துக் கொண்டிருந்தாள்.

இடையிடையே அவளுக்கு இளவர சர் அருள்மொழி வர்மரின் நினைவு வந்து கொண்டிருந்தது. அச்சமயம் அவர் கோடிக்கரை சேர்ந்து பத்திர மான இடத்தில் தங்கியிருப்பார் என்று எண்ணினாள். ஒரு வேளை தன் பெற்றோர் வீட்டிலேகூடத் தங்கி யிருக்கலாம். அல்லது நாகைப்பட்டினம் சென்று அங்கே இராஜ மாளிகையில் தங்கியிருக்கலாம். ஒரு வேளை கடலில் கப்பலிலேயே இருந்திருப்பாரோ? இருந் தால்தான் என்ன? அவர் ஏறிச் சென்ற பெரிய மரக்கலத்தை எந்தச் சுழிக் காற் றுத்தான் என்ன செய்து விடும்? அவ ரைப் பாதுகாக்க எத்தனையோ பேர் சுற்றிலும் சூழ்ந்திருப்பார்கள். தன்னைப் பற்றி அவர் ஞாபகப்படுத்திக் கொள்ளு வாரா? 'அந்தப் பேதைப் பூங்குழலி இச்சமயம் எங்கிருக்கிறாளோ ?' என்று எண்ணிக் கொள்ளுவாரா? ஒரு நாளும் மாட்டார். அவருடைய சகோதரி அனுப்பிய வந்தியத் தேவனைப் பற்றி நினைத்துக் கொள்வார். கொடும்பா ளூர்க் கோமகளைப் பற்றியும் நினைத் துக் கொள்ளலாம். இந்த ஏழைக் கரையர் குலப் பெண்ணை அவருக்கு எங்கே நினைவிருக்கப் போகிறது ?

இரவு வெகு நேரம் சுழிக் காற்றின் கோலாகலத்தை அநுபவித்து விட்டுப் பூங்குழலி ஸ்தூபத்தின் அடிவாரக் குகைக்குச் சென்று கண்ணயர்ந்தாள். தூக்கத்திலும் அவள் அமைதி அடைய வில்லை. ஏதேதோ கனவுகள் கண்டு கொண்டிருந்தாள். கடலில் படகில் சென்று வலை வீசுவது போலவும் அதில் இளவரசர் அகப்படுவது போலவும் ஒரு தடவை கனவு கண்டாள். மற் றொரு சமயம் அவளும் இளவரசரும் மீன்களாக மாறிக் கடலில் அருகருகே நீந்திப் போவதாகக் கனவு கண்டாள். ஒவ்வொரு கனவின் போதும் நடுவில் விழித்தெழுந்து, ''இது என்ன பைத் தியக்காரத்தனம்?'' என்று எண்ணி மனத்தைத் தெளிவாக்கிக் கொள்ள முயன்று மறுபடியும் உறங்கினாள்.

பொழுது விடிந்து அவள் நன்றாய் விழித்தெழுந்த போது சுழிக் காற்றின் கோலாகலம் ஒருவாறு அடங்கிவிட் டிருந்தது. இடியில்லை; மின்னல் இல்லை; மழையும் நின்று போயிருந்தது. எழுந்து கடற்கரைக்குச் சென்றாள். நேற்றிரவு போல் அவ்வளவு பெரிய அலைகள் இப் போது கடலில் அடிக்கவில்லை. ஆயி னும் கடல் இன்னும் கொந்தளிப் பாகவே இருந்தது. முன்னாளிரவு சுழிக் காற்று அத்தீவை என்ன பாடுபடுத்தி விட்டது என்பதற்கு அறிகுறியான காட்சிகள் நாலா பக்கமும் காணப் பட்டன. வேருடன் பெயர்ந்து தரை

யில் விழுந்து கிடந்த மரங்களும், முடிகள் வளைந்து தாழ்ந்திருந்த நெடிய பெரிய மரங்களும் காட்சி அளித்துக் கொண்டிருந்தன.

பூங்குழலி அக்காட்சிகளை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தபோது கடலில் சற்றுத் தூரத்தில் ஒரு கட்டு மரம் மிதப்பது போல் தெரிந்தது. அது கடற்கரையோரத்து அலைகளினால் பல தடவை அப்படியும் இப்படியும் அலைப்புண்ட பிறகு கடைசியாகக் கரையில் வந்து ஒதுங்கியது. அப்போதுதான் அதிலே ஒரு மனிதன் இருப்பதைப் பூங்குழலி கவனித்தாள். ஓடிப் போய்ப் பார்த்தாள். கட்டுமரத்தில் கட்டப்பட்டிருந்த அந்த மனிதன் குற்றுயிராயிருந்தான். அவனைக் கட்டு அவிழ்த்து விட்டு, ஆசுவாசப்படுத்தினாள். அவன் ஈழத்துக் கடற்கரைக் கிராமம் ஒன்றைச் சேர்ந்த வலைஞன். மீன் பிடிக்கப் போன இடத்தில் சுழிக் காற்றில் அகப்பட்டுக் கொண்டதாகக் கூறினான். தன்னுடன் இருந்த தோழனைக் கடல் இரையாக்கிக் கொண்டதாகவும் தான் பிழைத்தது புனர்ஜன்மம் என்றும் தெரிவித்தான். இன்னும் முக்கியமான ஒரு செய்தியையும் அவன் கூறினான்.

''முன்னிரவு நேரத்தில் கடுமையான சுழிக்காற்று அடித்துக் கொஞ்சம் நின்றதுபோலிருந்தது. எங்களைச் சுற்றிலும் காரிருள் சூழ்ந்திருந்தது. திடீரென்று ஒரு பேரிடி இடித்தது. அப்போது தோன்றிய மின்னல் வெளிச்சத்தில் இரண்டு மரக்கலங்கள் தெரிந்தன. ஒரு மரக்கலம் தீப்பிடித்து எரியத்தொடங்கியது. அந்தப் பயங்கரமான காட்சியைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தோம். அதில் மனிதர்கள் இருந்ததாகவே தெரியவில்லை. சற்றுத் தூரத்தில் இன்னொரு மரக்கலமும் நிற்கக் கண்டோம். அதில் மனிதர்களின் அவசர நடமாட்டமும் தெரிந்தது. பிறகு தீப்பிடித்த கப்பல் கடலில் முழுகிவிட்டது. மற்றொரு மரக்கலம் இருட்டில் மறைந்து விட்டது!'' என்று அம்மனிதன் தட்டுத் தடுமாறிக் கூறினான்.

இதைக் கேட்டவுடனே பூங்குழலிக்கு இளவரசரை ஏற்றிச் சென்ற கப்பல் அவற்றில் ஒன்றாயிருக்குமோ என்ற ஐயம் உதித்தது. அப்படி இருக்க முடியாது என்று நிச்சயம் அடைந்தாள். கடலில் எத்தனையோ கப்பல்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டுமிருக்கும். அதைப் பற்றி நமக்கு என்ன கவலை? ஆனாலும் தீப்பிடித்த கப்பலில் இருந்தவர்களில் சிலர் கடலில் விழுந்திருக்கக் கூடும். இந்தக் கட்டுமரத்து வலைஞனைப் போல் அவர்களில் யாராவது கையில் அகப்பட்டதைப் பிடித்துக் கொண்டு தத்தளிக்கக் கூடும். அவர்களுக்கு ஏன் நாம் உதவி செய்யக் கூடாது? படகில் ஏறிச் சென்று அப்படித் தத்தளிக்கிறவர்களை ஏற்றிக் கொண்டு வந்து ஏன் கரை சேர்க்கக் கூடாது? பின்னே, இந்த ஜன்மம் எதற்காகத்தான் இருக்கிறது?..

அவ்வளவுதான்; இந்த எண்ணம் தோன்றியதோ இல்லையோ, பூங்குழலி படகைக் கட்டவிழ்த்து நிமிர்த்திக் கடலில் தள்ளிவிட்டாள். தானும் ஏறிக் கொண்டாள். அவளுடைய இரும்புக் கரங்களின் பலம் முழுவதையும் உபயோகித்துத் துடுப்பை வலித்தாள். கரையில் வந்து மோதிய அலைகளைத் தாண்டி அப்பால் போகும் வரையில் மிகக் கடினமான வேலையாயிருந்தது. அப்புறம் அவ்வளவு கஷ்டமாக இல்லை. வழக்கம் போல் சர்வ சாதாரணமாக அவளுடைய கரங்கள் துடுப்பை வலித்தன. படகு உல்லாஸமாக ஆடிக் கொண்டு மெள்ள மெள்ள நகர்ந்து சென்றது.

பூங்குழலியின் உள்ளத்தில் குதூகலம் பொங்கியது. அவள் படகிலே வழக்கமாகப் பாடும் பழைய கீதம் தானாகவே புதிய உருவம் கொண்டது. அலைகளின் இரைச்சலை அடக்கிக் கொண்டு அந்தக் கீதம் அவளுடைய கம்பீரமான இனிய குரல் வழியாக வெளி வந்து நாற்றிசையும் பரவியது :—

'' அலைகடல் கொந் தளிக்கையிலே
அகக்கடல்தான் களிப்பதுமேன்?

நிலமகளும் துடிக்கையிலே
நெஞ்சகந்தான் துள்ளுவதேன்?

இடி இடித்து எண்திசையும்
வெடிபடும் அவ்வேளையிலே

நடன கலை வல்லவர்போல்
நாட்டியந்தான் ஆடுவதேன்?''

* * *

பாய்மரக் கட்டையைப் பிடித்துக் கொண்ட இளவரசரும் வந்தியத்தேவனும் அலைகடலில் மொத்துண்டு மொத்துண்டு மிதந்து கொண்டிருந்தார்கள். அன்று ஓர் இரவுதான் அவர்கள் அவ்வாறு கடலில் மிதந்தார்கள். ஆனால் வந்தியத்தேவனுக்கு அது எத்தனையோ

யுகங்கள் எனத் தோன்றியது. அவன் சீக்கிரத்திலேயே நிராசை அடைந்து விட்டான்; பிழைத்துக் கரை ஏறு வோம் என்ற நம்பிக்கையை அடியோடு இழந்து விட்டான். ஒவ்வொரு தடவை அலை உச்சிக்கு அவன் போய்க் கீழே வந்தபோதும் ''இத்துடன் செத்தேன்'' என்று எண்ணிக் கொண்டான். மறுபடி யும் உயிரும் உணர்வும் இருப்பதைக் கண்டு வியந்தான். — அடிக்கடி இளவர சரைப் பார்த்து ''என்னுடைய அவசர புத்தியினால் தங்களையும் இந்த ஆபத் துக்கு உள்ளாக்கினேனே?'' என்று புலம்பினான். இளவரசர் அவனுக்கு ஆறுதல் கூறித் தைரியம் ஊட்டி வந்தார். ''மூன்று நாள் நாலு நாள் வரையில் கடலில் இம்மாதிரி மிதந்து பிழைத்து வந்தவர்கள் உண்டு'' என்று அடிக்கடி சொல்லி வந்தார். ''நாம் கடலில் விழுந்து எத்தனை நாள் ஆயின?'' என்று வந்தியத்தேவன் கேட்டான். ''இன்னும் ஒரு ராத்திரி கூட ஆகவில்லையே?'' என்றார் இள வரசர். ''பொய்! பொய்! பல நாட்கள் ஆகியிருக்க வேண்டும்'' என் றான் வந்தியத்தேவன்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவ னுக்கு இன்னொரு கஷ்டம் ஏற்பட்டது. தொண்டை வறண்டு போய்த் தாகம் எடுத்தது. தண்ணீரிலேயே மிதந்து கொண்டிருந்தான்; ஆனால் தாகத்துக் குக் குடிக்கத் தண்ணீர் இல்லை. இது பெரிய சித்திரவதையாயிருந்தது. இள வரசரிடம் கூறினான். ''கொஞ்சம் பொறுமையாயிரு! சீக்கிரம் பொழுது விடியும்! எங்கேயாவது கரையிலே போய் ஒதுங்குவோம்!'' என்றார் இள வரசர். சிறிது நேரம் பொறுத்துப் பார்த்தான்; முடியவில்லை. ''ஐயா! என்னால் இந்தச் சித்திரவதையைப் பொறுக்க முடியாது. கட்டை அவிழ்த்து விடுங்கள்! கடலில் முழுகிச் சாகி றேன்!'' என்றான். இளவரசர் மீண்டும் தைரியம் கூற முயன்றார். ஆனால் பலிக்கவில்லை. வந்தியத் தேவனுக்கு வெறி மூண்டது. தன்னுடைய கட்டுக் களைத் தானே அவிழ்த்துக் கொள்ள முயன்றான். இளவரசர் அதைப் பார்த்தார். அரு கில் நெருங்கிச் சென்று அவனுடைய தலையில் ஓங்கி இரண்டு அறை அறைந்தார். வந்தியத் தேவன் உணர்வை இழந் தான்!

அவன் மறுபடியும் உணர்வு பெற்றபோது பொழுது விடிந்து வெளிச்சமாயிருப் பதைக் கண்டான். அலைகளின் ஆரவார மும் சிறிது அடங்கியிருந்தது. சூரியன் எங்கேயோ உதயமாகியிருக்க வேண்டும். ஆனால் எங்கே உதயமாகியிருக்கிறது என்று பார்க்க முடியவில்லை.

இளவரசர் அவனை அன்புடன் நோக்கி, ''தோழா! சமீபத்தில் எங் கேயோ கரை இருக்க வேண்டும். தென்னை மரம் ஒன்றின் உச்சியைச் சற்று முன் பார்த்தேன். இன்னும் கொஞ்சம் பொறுமையாயிரு!'' என்று சொன்னார்.

''இளவரசே! என்னைக் கைவிட்டு விடுங்கள்! தாங்கள் எப்படியாவது தப்பிப் பிழையுங்கள்!'' என்றான் வந்தியத்தேவன்.

''வேண்டாம்! அதைரியப்படாதே! உன்னை அப்படி நான் விட்டுவிட மாட் டேன்!... ஆகா! அது என்ன! யாரோ பாடுகிற குரல் போல் தொனிக் கிறதே!'' என்றார் இளவரசர்.

ஆம்; அப்போது அவர்களுடைய காதில் பூங்குழலி படகிலிருந்து பாடிய பாட்டுத்தான் கேட்டது.

''அலைகடல் கொந் தளிக்கையிலே
அகக்கடல் தான் களிப்பதுமேன்?''

என்ற கீதம் அவர்களுடைய காதில் அபய கீதமாகத் தொனித்தது. உடற் சோர்வும் மனச் சோர்வும் உற்று முக்கால் பிராணனை இழந்திருந்த வந் தியத்தேவனுக்குக்கூட அந்தக் கீதம் புத்துயிர் அளித்து உற்சாகம் ஊட்டியது.

''இளவரசே! பூங்குழலியின் குரல் தான் அது! படகு ஓட்டிக் கொண்டு வருகிறாள். நாம் பிழைத்துப் போனோம்!'' என்று சொன்னான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் படகு அவர்கள் கண்ணுக்குத் தென்பட்டது. நெருங்கி நெருங்கி அருகில் வந்தது. பூங்குழலி, 'இது உண்மையில் நடப்பது தானா?' என்று சந்தேகித்துச் செய லிழந்து நின்றாள். இளவரசர் வந்தியத் தேவனைக் கட்டுஅவிழ்த்து விட்டார். முதலில் தாம் படகிலே தாவி ஏறிக் கொண்டார். பின்னர் வந்தியத் தேவனையும் ஏற்றி விட்டார். பூங் குழலி கையில் பிடித்த துடுப்புடனே சித்திரப் பாவையைப் போல் செய லற்று நின்றாள்.



இரண்டாம் பாகம்
முற்றிற்று



- மகாநாட்டில் விவாதம்
- சிந்தனையாளர்
- பாரதப் பிரதமரும் பொருளாதார நிபுணரும்
- ஸ்ரீமதி ஜானகி லோகநாதனும் ஸ்ரீ லோகநாதனும்
- பேச்சாளர்

# பதவிகளுக்குப் பெருமையளித்தவர்



கிழிந்த அரைக்கைச் சொக்காய் அணிந்து திருநெல்வேலி ஹிந்து கல்லூரியில் இண்டர் மீடியட் வகுப்புக்குள் நுழைந்த இளைஞனை நோக்கி, 'இதென்ன கல்லூரிக்குக் கிழிசல் சொக்காயுடன் வருகிறாயே?' என்று பேராசிரியர் பரிவுடன் கேட்டார். இளைஞனுக்கோ தன் சொக்காயிலுள்ள கிழிசலைப் பற்றி அக்கறையில்லை. கல்விதான் அவனது ஒரே குறிக்கோள். இரு அண்ணன்மார்கள், ஒரு தம்பியுடன் திருநெல்வேலிக்கு அருகிலுள்ள பாலாமடை கிராமத்தில் பிறந்த இந்த இளைஞன் பெயர் லோகநாதன். பொருளாதார வளம் கொழிக்காத குடும்பத்தில் பிறந்தும் பாரத நாட்டின் பொருளாதார வளத்துக்கும் ஆசிய நாடுகள் பலவற்றின் பொருளாதார மேம்பாட்டுக்கும் ஏறக்குறைய அரை நூற்றாண்டுக் காலம் அரும் பணிகள் புரிந்து வெற்றி கண்டார் டாக்டர் பி. எஸ். லோகநாதன்.

திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரியில் பொருளியல் பயின்று பி. ஏ. (ஆனர்ஸ்) பட்டம் பெற்றுச் சென்னை பல்கலைக் கழகத்தில் ரீடர், பேராசிரியர் பதவிகளை அணி செய்த டாக்டர் லோகநாதன், லண்டன் பொருளியல் பள்ளியில் பயிலும் அரிய வாய்ப்பினைப் பெற்று டி. எஸ்ஸி. (டாக்டர்) பட்டம் பெற்றார். சாதாரணமாக, பிஎச்.டி. பட்டம் பெறாதவர்கள் லண்டன் பொருளியல் பள்ளியில் டாக்டர் பட்டம் பெறுவதற்கான படிப்புக்கு அனுமதிக்கப்படுவதில்லை. 'இந்திய தொழில் துறை அமைப்பு' என்ற தலைப்பில் இவர் எழுதிய அரியதொரு நூலும், இவர் வகித்துச் சிறப்பித்த பதவிகளும் ஆற்றிய பணிகளும், பிஎச். டி. பட்டம் இல்லாமலே அப்பள்ளியில் டி. எஸ்ஸி. பட்டக் கல்வி பயில்வதற்கு இவருக்கு வாய்ப்பு அளித்தன.

டாக்டர் லோகநாதன் பாரதத்திலும் பல்வேறு ஆசிய ஐரோப்பிய நாடுகளிலும், ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்திலும் வகித்துள்ள பதவிகளின் பட்டியலை மட்டும் தொகுத்து வெளியிட்டால் அவை பல பக்கங்களுக்கு மேல் நிரம்பி வழியும். நினைவு கூர்ந்து கூறுவது அவருக்கே சாத்தியமா என்பது சந்தேகம்! அவ்வளவு பதவிகள்! தலைவராகவோ, நிறுவனங்களில் செயலாளராகவோ பல்வேறு குழுக்களிலும், மாநாடுகளிலும், ஆராய்ச்சி ஸ்தாபனங்களிலும் டாக்டர் லோகநாதன் வகித்த பதவிகளனைத்தும் அவரது சேவைத் திறமையால் சிறப்பெய்தின. அவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'ரீடர்' பதவி வகித்த பொழுது அதே பொருளியல் துறையில் டாக்டர் மத்தாய் பேராசிரியராகப் பதவி வகித்தார். அவ்வமயம் பாரதம் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருந்தது. ஓர் அறிக்கையில் பாரதம் கையெழுத்திடுவதா, வேண்டாமா என்பது குறித்து டாக்டர் மத்தாய்க்கும் இவருக்குமிடையே கருத்து வேற்றுமை எழுந்தது. பேராசிரியர் மத்தாயின் கீழ் இவர் பணியாற்றிய போதிலும், அறிக்கையில் கையெழுத்திடுவது பாரதத்தின் நன்மைக்கு உகந்ததன்று என்ற கருத்தினை இவர் வலியுறுத்திக் கூறினார். டாக்டர் மத்தாய் இதற்கு நேர்மாறான அபிப்பிராயம் கொண்டிருந்த போதிலும், தமக்கு உசிதம் என்று தோன்றிய கருத்தினை இவர் துணிச்சலாகக் கூறியதை வரவேற்று, ''கல்வித் துறையிலுள்ளவர்களுக்கு இந்தச் சுதந்திரம் இன்றியமையாதது'' என்றும் சொன்னார்.

'' அந்தக் காலத்தில் கருத்துக்களை ஒளிக்காமல் வெளியிடப் போதிய அளவு சுதந்திரம் இருந்தது. அந்த அளவு இப்பொழுது சுதந்திரம் இருக்கிறதா என்பது சந்தேகமே! அமைச்சரவையின் கருத்துக்கு மாறாக ஏதா







வது சொன்னால் என்ன நேருமோ என்ற பயம் பொதுவாகப் பலருக்கு இருக்கத்தான் செய்கிறது'' என்கிறார் டாக்டர் லோகநாதன்.

டாக்டர் லோகநாதன் 'ஈஸ்டர்ன் எகானமிஸ்ட்' பத்திரிகையின் ஆசிரியராக 1947 வரை நான்கு ஆண்டுகள் ஆற்றிய தொண்டு குறிப்பிடத்தக்கது. பிறகு ஐ. நா. சபையின் ஈகாஃபே ( ECAFE - Economic Commission for Asia and Far East ) நிறுவனத்தின் நிர்வாகச் செயலாளராகப் பதவியேற்று ஷாங்ஹாய் சென்றார். மீகாங் நதியின் நீர் கம்போடியா, லாவோஸ், வியட்நாம், தாய்லாந்து ஆகிய நான்கு நாடுகளின் விவசாயத்துக்குப் பயன்படும் வகையில் இவர் உருவாக்கி அமெரிக்க நிதி உதவியுடன் செயல்படுத்திய மீகாங் நதித் திட்டம் டாக்டர் லோகநாதனின் அரிய சாதனைகளுள் ஒன்று. ஈகாஃபேயில் இடம் பெறுதிருந்த ஜப்பானின் சார்பாகப் பிடிவாதமாக வாதாடி, அந்த நிறுவனத்தில் துணை உறுப்பினராக ஜப்பானைச் சேர்த்துக் கொள்ளச் செய்தது மற்றொரு வெற்றி.

பாரதம் திரும்பிய பிறகு, 1958ல் தேசிய உற்பத்திக் குழுவின் ( National Productivity Council) தலைவராகப் பொறுப்பேற்றுப் பயனுள்ள பணியாற்றினார். தில்லி தேசிய பொருளியல் ஆராய்ச்சிக் குழுவின் தலைவராக 1967 வரை இவர் புரிந்த சேவை நாட்டின் பொருளாதார வளத்துக்குப் பெருமளவில் உதவியுள்ளது. இந்த நிறுவனத்தில் இவர் பதினொரு ஆண்டுகள் ஆற்றிய பணியினைப் பாராட்டுமுகமாக இம்மாதம் இந்நிறுவனத்தில் இவருக்குச் சிலையெடுத்துக் கௌரவிக்கப்படுகிறது. இந்தோனேஷியாவில் கூடிய ஈகாஃபே நிறுவன மாநாட்டில், ஆசிய நாடுகளிடையே பரஸ்பரம் பொருளாதார இணைப்பு உருவாக வேண்டியதன் அவசியத்தை இவர் வலியுறுத்தினார். பல்வேறு நாடுகளில் உருவாகும் திட்டங்களைப் பற்றிய தகவல்கள் மட்டுமே ஈகாஃபே நிறுவனத்துக்குத் தெரிய வந்தன. அது போதாது; எந்த எந்த நாடுகளில் என்ன என்ன பொருள்கள் அத்தியாவசியமாகத் தேவைப்படுகின்றன என்பதை அறிந்து பரஸ்பர உதவிக்கான பொருளாதார, இணைப்புத் திட்டம் ( Economic Co-ordination ) உருவாக வேண்டும் என்பது டாக்டர் லோகநாதனின் அவா. பாகிஸ்தான் அந்த யோசனையை அப்போது எதிர்த்தது. எனினும் வேறு பெயரில் ( Plan Harmonisation ) அந்தத் திட்டத்துக்கு ஆசிய நாடுகள் பல இன்று ஆதரவு தெரிவிக்கின்றன.

தாய்லாந்து மன்னர், டாக்டர் லோகநாதனின் அரிய பணிகளைப் பாராட்டும் வகையில், தமது நாட்டின் மிகச் சிறந்த விருதும் (Order of the Royal crown of Thailand) பதக்கமும் இவருக்கு வழங்கிக் கௌரவித்துள்ளார். தனது நிறுவனங்களில் பணியாற்றுவோர் எவ்விதமான விருதுகளையும் பட்டங்களையும் ஏற்றுக் கொள்ளலாகாது என்ற பொதுவான விதிக்கு டாக்டர் லோகநாதன் விஷயத்தில் ஐ.நா. விலக்கு அளித்தது!

பொருளாதாரம்தான் இவரது மூச்சுக் காற்று என்றாலும் கிரிக்கெட், சினிமா, உபந்நியாசங்கள் போன்ற பல்வேறு துறைகளிலும் இவருக்கு ஆர்வம் உண்டு.

பஞ்சாங்கக் கணக்குப் பிரகாரம் செப்டம்பர் 22ம் தேதியே இவரது எழுபத்தைந்தாவது பிறந்த நாள் வைபவம் நிகழ்ந்து விட்ட போதிலும், ஆங்கில மாதக் கணக்குப்படி அக்டோபர் 10ம் தேதி இவரது பிறந்த நாள் விழாவைத் தில்லியில் கொண்டாடுகிறார்கள். மகத்தான சாதனைகள் புரிந்து உலகப் பெருந் தலைவர்களுக்கெல்லாம் நன்கு அறிமுகமாகியுள்ள இந்த எழுபத்தைந்து வயது இளைஞர், வாழ்க்கையைத் தொடங்கிய போது தம்மிடம் குடிகொண்டிருந்த எளிமையுடனேயே இன்றைக்கும் விளங்குகிறார்.

— ''பாணன்''

கண்டுகொள்க

# ஸூப்பர் ஸர்ஃப் மூலம் செய்த ஒரே ஒரு சலவை, வேறெந்த சலவைப் பவுடரினாலும் செய்த 2 சலவைகளை விட அதிக வெண்மை அளிக்கிறது






ஆராய்ச்சிக் கூட சோதனைகள் பன்முறை நிரூபித்துள்ளன: போட்டியிடும் மிகச் சிறந்த வேறெந்தப் பவுடரினாலும் இரு முறை சலவை செய்த துணிகளை விட, ஸூப்பர் ஸர்ஃப் மூலம் ஒரே ஒரு தடவை சலவை செய்த துணிகளுக்கு வந்தடையும் வெண்மையே அதிகம். நீங்களே கண்டுகொள்ளுங்கள். இரண்டாம் பட்சமான எதையும் ஏற்காதீர்கள். இந்தியாவின் தலைசிறந்த ரகம் : ஸூப்பர் ஸர்ஃப்.

**ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்!**

(வெண்மையூட்டும் சாதனம் எதுவும் சேர்க்கத் தேவையில்லை).

லிண்டாஸ்.SU.76-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# ரகுபதி ராகவ் மகாத்மா காந்தி

2

தமிழாக்கம்: ராஜாஜி

**நா**ன் ஆசைப் படுகிறேன் ; 'பாபம்' ஏதும் செய்யாமல், உண்மையை விட்டுப் பிறழாமல் எண்ணம், பேச்சு, செயல் மூன்றிலும் பழுதற்ற அஹிம்ஸையைக் கடைப்பிடித்து நடக்க ஆசைப் படுகிறேன். இதற்காகவே மிக அலைந்து வருகிறேன். என்னுடைய சக்தியோ அதற்குப்போதியதாக இல்லை. நான் ஆசைப்படும் நிலையேதான், நாம் அனைவரும் நாட வேண்டிய நிலை என்பதை அறிவேன். ஆயினும், ஆசைப்படி நடந்து கொள்ள என்னால் முடியவில்லை. இந்த மலை மேல் ஏறுவது மிகக் கடினமாக இருக்கிறது. ஆயினும் ஏறும்போது உண்டாகும் வருத்தமே என் உள்ளத்துக்கு மெய்யான இன்பம் தருகிறது. ஏறும் ஒவ்வோர் அடியும் எனக்கு ஒரு புது சக்தி தருகிறது. அடுத்த அடி எடுத்து வைக்க பலம் தருகிறது.

(யங் இந்தியா 9 - 4 - 25)

* * *

**ந**டந்து செல்ல வேண்டிய பாதையை அறிவேன். அந்தப்பாதை அகலமான பாதை அல்ல. நேராகச் செல்லுகிறது. நல்ல கூரான கத்தி முனையைப் போன்ற இந்தக் கஷ்டமான பாதையில் நடப்பது எனக்கு ஆனந்தம் தருகிறது. சில சமயம் தவறுகிறேன். தவறியபோது புலம்புகிறேன். ஆனால் பகவானுடைய வாக்கு இருக்கிறது.

**நல்வழியில் முயல்பவன் இவ்வுலகத்திலும் நஷ்டம் அடையமாட்டான்; முக்தி மார்க்கத்திலும் நஷ்டம் அடைய மாட்டான். அவனுடைய முயற்சி வீண்போகாது. முயற்சியே நன்மை தரும், நிச்சயம், என்று பகவான் அருச்சுனனுக்கு உறுதிமொழி தந்து சந்தேகம் தீர்த்தான்.**

பகவானுடைய இந்தச் சூளுரை பொய்யாகாது. என் பலவீனத்தினால் ஆயிரம் முறை வீழ்ந்தேனானாலும் என் நம்பிக்கையை இழக்க மாட்டேன். இந்த ஊனுடலை ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அடக்கியே தீருவேன். அடக்கித் தெளிவு பெறுவேன். இந்த அசையா நம்பிக்கையோடு உயிர் வைத்துக் கொண்டு இருக்கிறேன்.

(யங் இந்தியா 17 - 6 - 26)

* * *

**க**டவுளை நான் என் கண்ணால் காணவில்லை. வேறு விதத்திலும் நான் கண்டு விட்டேன் என்று சொல்ல முடியாது. உலகம் எல்லாம் நம்புகிறது, ஈசன் ஒருவன் இருக்கிறான் என்று. அந்த நம்பிக்கையைக் கொண்டு நானும் வாழ்க்கையைச் செலுத்துகிறேன். எனக்கு உண்டாகியிருக்கும் இந்த நம்பிக்கை அழிக்க முடியாத நம்பிக்கை. அழியாத நம்பிக்கை பிரத்யக்ஷ பிரமாணத்துக்குச் சமமாகவே ஆகிவிடுகிறது. என்றாலும் எவ்வளவு உறுதியானதாயினும் ஒரு நம்பிக்கையைப் பிரத்யக்ஷமாகக் கண்டேன் என்று சொல்லுவது உண்மைக்கு மாறாகும். ஆனபடியால் என்னுடைய கடவுள் நம்பிக்கைக்குச் சரியான ஒரு சொல்லை நான் காணவில்லை. இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன்.

(சுய சரிதம்)



# படியில் குணத்துப் பரதன்

ரா. கணபதி



பரதன் மாளாத மனச் சுமையுடன் மாதாவிடம் சொன்னான்: ''அம்மா, அண்ணன் அயோத்தி வேந்தனாக முடிசூட்டிக் கொண்ட பின்னும் உன்னிடம் நான் பேசவில்லை. இன்று தான் உன்னைப் பல்லாண்டுகளுக்கு அப்புறம் 'அம்மா' என்று அழைக்கிறேன். ஆனால் இப்போது அந்த அண்ணனை அண்ணன் என்று பூரண மனத்தோடு சொல்ல முடியவில்லை......''

பரதனால் அதற்கு மேல் பேச முடியவில்லை.

கைகேயி விம்மலுக்கிடையே பரதனிடம் பேசினாள்: ''உன் நேர்மை உள்ளம் எனக்குத் தெரியுமாதலால் நீ இங்கு வருவாய் என எதிர்பார்த்தேன். அன்று ராமனை வனத்துக்கு அனுப்பினேன் என்பதற்காக நீ எவ்வளவு ஆத்திரம் கொண்டாயோ, அதே போல் இன்று வைதேகியை ராமன் கானகத்துக்குத் துரத்தியிருப்பதும் உனக்கு ஆத்திரம் ஊட்டும் என்பது நான் எதிர்பார்த்ததுதான். 'எனக்கு நீ பட்டம் கேட்டதையாவது மன்னித்தாலும் மன்னிப்பேன்; ஆனால் நான் பட்டம் சூடியபின் அண்ணன் இங்கு அயோத்தியில் இருந்தால் எனக்கு எதிர்ப்பு உண்டாக்குவான் என்று சந்தேகித்து அவனைக் காட்டுக்கு விரட்டினாயே, அதைத்தான் என்னால் ஒருகாலும் மன்னிக்க முடியாது' என்று நீ அன்றைக்குச் சொன்னது இன்று போல் இருக்கிறது. பிரியத்துக்கு உரியவர்களைச் சந்தேகிக்கும் படுபாதகத்தை உன்னால் தாளவே முடியாது என்று நான் அறிவேன். ஜானகியைச் சந்தேகித்து ராகவன் கானகத்துக்கு அனுப்பியிருப்பதை உன்னால் ஒரு போதும் மௌனமாக ஏற்க முடியாது என்று நான் அறிவேன். ஆதியில் நான் அவனை வனத்துக்குப் போகுமாறு சொல்லவேயில்லை. அவனே சுய விருப்பத்தின் மீது சென்றான். ஆனால் உலகம் என்னைத் தூற்றுகிறது. இப்போது ராகவனே சீதையையே சந்தேகித்துக் காட்டுக்குத் துரத்தியிருக்கிறான். ஆனால் உலகத்தினர் இந்தக் கொடுமையைப் பற்றி வாய் விட்டுக் கூடப் பேசக் காணோம். இப்போது நானும் நீயும் மட்டும் என்ன செய்ய முடியும்?'' கைகேயி அலுப்புடன் முடித்தாள்.

''உன்னால்தான் எல்லாமும் செய்யக் கிடக்கிறது'' என்றான் பரதன்.

வினாக் குறியுடன் நோக்கினாள் கைகேயி.

பரதன் தொடர்ந்தான்: ''ஸ்ரீ ராமசந்திரனை நீதான் கூப்பிட்டனுப்பி விசாரிக்க வேண்டும். அன்றும் இன்றும் என்றும் உன்னையே அவன் பெற்ற தாய்க்கு மேலாகக் கருதி வருகிறான். எனவே, அவனைக் கண்டிக்க உனக்குப் பூரண உரிமை உண்டு. ராமனுக்கு ராஜ்ய ஆசை எழக் கூடும் என்று நீ சந்தேகித்ததைவிட எத்தனை எத்தனையோ கொடூரமானது மதனியின் நடத்தையில் அவனுக்கு ஏற்பட்டுள்ள சந்தேகம். ஆதியில் அவனைச் சந்தேகித்த நீயே இவ்விஷயமாகக் கேட்பதால் அவன் மனத்திலும் அது அடிவாரம் வரையில் ஆழத் தைக்கும். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். குற்றமறியாத என் மதனி கர்ப்ப காலத்தில் வனத்தில் நொந்து துடிப்பது உனக்குச் சம்மதமானால் பேசாமலே இருந்து நல்ல பெயர் வாங்கிக் கொள்'' என்று சொல்லி விட்டுக் கோபமாகப் புறப்பட்டான் பரதன்.

அச் சமயத்தில் ராமனே அங்கு வந்தான். 'சீதாராம், சீதாராம்' என்று மொழிந்தவாறு உடன் வந்தான் அநுமன்.

பரதன் நின்றான். ராமனைக் கண்ணெடுத்தும் பாராமல், அநுமனை நோக்கி வெடித்த குரலில், ''சீதாராமனாவது, சீதாராமன்? சீதையை அவன் வனத்தில் அல்லவா வைத்திருக்கிறான்?'' என்றான்.

ஆஞ்சநேயன் அடக்கமாக, உருக்கமாகப் பதில் சொன்னான்: ''வனத்தில் அல்ல; தம் மனத்திலேயே தேவியை வைத்திருக்கிறார் நம் அண்ணல். தாங்கள் கூடவா எல்லோரையும் போல் நினைக்கிறீர்கள்?''

பரதனும் கைகேயியும் சிந்தனையில் ஆழ்ந்தனர். எல்லோரும் அப்படித்தான் நினைத்தார்கள். ஆனால் வாய்விட்டு அதை மொழியவில்லை. இவ்விருவருமோ வாய் விட்டும் கூறி விட்டனர்.

நுண்ணிய உதரமும் விரிந்த மார்பும் எழும்பப் பெருமூச்செறிந்தான் ராகவன். பிறகு கைகேயியை நோக்கி, ''சித்தி! நீ எனக்கு மகத்தான நன்மைதான் செய்திருக்கிறாய். அதை உலகம் புரிந்து கொள்ளவில்லை. வனவாச தர்மத்தைவிட ராஜ தர்மம் பயங்கரமாக இருக்கிறது. எனக்குப் பதினாலாண்டுகளுக்கு மட்டும் வனவாச வரம் கேட்காமல் நிரந்தரமாகவே கேட்டிருக்கக் கூடாதா?'' என்றான்.

கைகேயி பரதனைப் பார்த்துப் பச்சாத்தாபத்துடன் மொழிந்தாள்: ''பரதா! ராமனுக்கு உன் மதனி மேல் இம்மியும் சந்தேகமில்லை; ராஜ தருமத்தை ஒட்டியே அவளைக் காட்டுக்கு ஓட்டி விட்டான்.''

பரதனால் பேச முடியவில்லை. கண்ணீர் வழியும் முகத்துடன் அண்ணனை அண்ணாந்து நோக்கினான்.

ராகவன் நொந்த குரலில் மொழிந்தான்: ''நம் கதை முழுவதுமே சந்தேக மயமாகி விட்டது. சித்தி என்னைச் சந்தேகித்துக் காட்டுக்கு அனுப்பினாள். அதனால் ஒரு ராஜ்யம் முழுவதன் கண்டனத்தையும் தண்டனையாகப் பெற்றாள். நான் மாய மானைத் தொடர்ந்து சென்றபோது சீதை லட்சுமணனை அநியாயமாகச் சந்தேகித்தாள். இன்று அவள் மீதே சந்தேகம் ஏற்பட்டு



## காந்திஜி விரும்பிய கீதம்

அதே லட்சுமணன் அவளை வனத்தில் விட்டு வந்திருக்கிறான். ஆனால்....ஆனால்... பரதா, நீதான் எல்லோரையும்விட பயங்கரமாகச் சந்தேகத்துக்குப் பாத்திரமானவன்....''

**ரா**மாயணத்தின் உத்தம பாத்திரங்கள் அனைவரும் சொல்லொணாத் துயரத்துக்கு ஆளானவர்கள் என்பது உண்மை. ஆனால் பரதனின் துயரமே மிகப் பரிதாபகரமானது. எதிரியின் கெட்ட எண்ணத்துக்கு இலக்காவதைவிட, அன்புக்கும் நம்பிக்கைக்கும் உகந்தவர்களின் சந்தேகத்துக்கு ஆளாவதே பெரும் கொடூரமல்லவா ?

பரதனைச் சந்தேகிக்கும் படலம் அவனது தந்தையிடமிருந்தே தொடங்கி விட்டது.

திருமணமான பின் பரதன் தனது மாமன் யுதாஜித்தின் நாடான கேகய தேசம் சென்றான். **பரதன் கேகய நாட்டில் இருக்கும் போதே** வெகு அவசரமாக ராமனுக்கு முடி சூட்ட முடிவு செய்கிறான் தசரத மன்னன். பரதனையும் கேகய மன்னனையும் மட்டும் அழைக்காமல் பட்டாபிஷேகம் செய்தால் நன்றாக இராது என்பதால், சீதையின் தந்தை ஜனகரையும்கூட அழைக்காமலே முடிசூட்டு வைபவத்துக்கு முனைகிறான் அவன். தசரதன் மட்டும் பரதனை அழைத்திருந்தால் நிகழ்ச்சிகள் எப்படியெல்லாம் மாறியிருக்கும்?

தசரதன் மட்டும்தானா பரதனைப் புரிந்து கொள்ளவில்லை? அவனைப் பெற்றெடுத்த கைகேயியும் புரிந்து கொள்ளவில்லை.

ராமனைக் கானகத்துக்கும், தசரதனை வானகத்துக்கும் அனுப்பிவிட்ட கைகேயி, கேகய நாட்டிலிருந்து திரும்பிய பரதனை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறாள். ''இந்த ராஜ்யத்தை உனக்காகத்தான் வாங்கி வைத்திருக்கிறேன். உன்னிடம் மக்களுக்கும் பகை இல்லை. அயோத்தி உன் வசமாயிற்று'' என்கிறாள்.

தந்தை, அன்னை இருவரும் தன்னைப் புரிந்து கொள்ளாததில் பரதனின் பாபமற்ற உள்ளம் என்ன பாடுபட்டிருக்கும்!

புண்ணுண்ட அந்தப் புண்ணிய நெஞ்சை மேலும் துளைக்கிறாள் கௌசல்யா தேவி.

''உன் எண்ணம் எவ்விதத் தடையும் இன்றி ஈடேறி விட்டது. உன் அண்ணனை விரட்டிய அதே காட்டுக்கு என்னையும் நீ இப்போது ஓட்டி விடுவதுதான் உனக்குப்

பொருத்தம்; அதுவே எனக்குத் திருப்தியும்'' என்று கூர்மேலாகக் கூறுகிறாள் கௌசல்யை.

பரதன் தவியாகத் தவிக்கிறான்; துடியாகத் துடிக்கிறான். ராமனது வனவாசத்துக்குத் தான் உடந்தையானால் தன்னை மாபாவம் அனைத்தும் சேரட்டும் என்று ஆணை மேல் ஆணை வைக்கிறான்.

ராமனை மீண்டும் அயோத்திக்கு அழைத்து வர அவன் குடிமக்களோடு அரணியம் புறப்பட்ட பிறகும் சந்தேகப் பேய் தொடருகிறது. கங்கையின் தென் கரையில் இருந்த குகன் பரதனை அக்கரையில் கண்ட உடனேயே ஆறாத சீற்றம் அடைகிறான்.

ராமனைக் கொல்லவே பரதன் காட்டுக்கும் வந்திருக்கிறான் என்ற சந்தேகத்தினால் பரதனுடன் பொருதத் துடிக்கிறான் குகன்.

''அஞ்சன வண்ணன் என் ஆருயிர் நாயகன்ஆளாமே
வஞ்சனை யால(ர)சு எய்திய மன்னரும் வந்தாரே''

என்று குகன் கூவியபோது பரதனின் மனம் எப்படிப் பரிதவித்திருக்கும்!

வேட குகன் மட்டும்தானா? வேதமுனி பரத்வாஜரும் பரதனை வேதனை செய்கிறார். தமது ஆசிரமத்துக்கு வந்துள்ள பரதனை நேரடியாகவே கேட்கிறார், எதையும் ஒளிக்க அறியாத முனிவர்: ''ராமனுக்குரிய அரசை அநுபவிக்கும் நீ, அவனுக்கு மேலும் கொடுமை செய்யவே வனத்துக்கும் வந்தாயோ?''

தூரத்தே வரும் பரதனைக் கண்டு, அவனோடு ஆதி நாள் முதற் கொண்டு பழகிய சோதரன் லட்சுமணனும் இப்படியே ஐயுற்று அவனைக் கொல்ல முற்படுகிறான்.

அப்போது பரதனை முற்றிலும் புரிந்து கொண்ட ஒரே ஆத்மாவாக ராமன் சொல்கிறான்: ''பரதன் ராஜ்ய ஆசை கொண்டவன் அல்ல. அவனுக்கு ஆட்சியில் சற்றும் எண்ணம் இல்லை என நிரூபிக்கட்டுமா? அவனிடம், 'பரதா! இந்த ராஜ்யத்தை அப்படியே லட்சுமணனிடம் தந்துவிடு' என்கிறேன். அக்கணமே அவன் மனமார அதை உனக்குத் தத்தம் செய்வான்.''

**ப**ரதனுக்குத் தன்னை ஒருகாலும் சந்தேகியாதவர் இருவர் என்பது நிச்சயம். ஒன்று ராமன். மற்றது சீதா தேவி.

நியாயமாகப் பார்த்தால் சீதைதான் அவனைக் குறித்து அதிக சம்சயம் உற்றுச் சபித்திருக்க வேண்டும். ஆனால் அவள் அப்படிச் செய்யவில்லை. மாரீச மானின் வண்ண விசித்திரமான தோலை அவள் ராமனிடம் பிடிவாதமாகக் கேட்டாளே, அது எதற்கு? தனக்காக அல்ல. வனவாசம் முடிந்து நாடு திரும்பியபின், பரதனுக்குத் தன் அன்பளிப்பாகத் தருவதற்கே!

அப்படிப்பட்ட மதனியை அண்ணன் நிரஸ்கரித்ததை பரதனால் பொறுக்க முடியவில்லை. அண்ணன் அவனைச் சந்தேகிக்கவில்லை என்று இப்போது அறிந்து கொண்டபின் ஆறுதல் ஏற்பட்டது.

**ஆ**னால் அந்த ஆறுதல் அற்றுப் போகுமாறு ராமன் அநுமனிடம் அரற்றினான்: ''ஆஞ்சநேயா! என் மீது சந்தேகப்பட்டதற்காக மன்னிப்புக் கோர விரும்புகிறான் பரதன். ஆனால் உனக்குத் தெரியும், அவன் என்னைச் சந்தேகித்தது எனக்குரிய தண்டனைதான் என்று'' — இவ்விதம் ராமன் கூறுவதற்கு என்ன அர்த்தம்? சொல்லின் செல்வனை ஆஞ்சநேயன் ஏன் சொல்லே எழாமல் சோகச் சிலையாய்ச் சமைந்திருக்கிறான்?

ஆஞ்சநேயன் சொல்லாததையும் சத்திய வசனராகிய வால்மீகி கூறுகிறார், யுத்த காண்டத்தின் இறுதியிலே.

ராவண வதமானபின் ஸ்ரீ ராமன் அயோத்திக்குத் திரும்புகையில் வழியிலே பரத்வாஜ ஆசிரமத்தில் தங்குகிறான். ஆஞ்சநேயனை முன் கூட்டியே பரதனிடம் அனுப்புகிறான். அப்போது ராமன் சொல்வதைக் கேளுங்கள்:

''நான் வருவதாக நீ சொல்லக் கேட்டவுடனே பரதனுடைய முக பாவம் எப்படி மாறுகிறதோ, உடனுக்குடன் அவனிடமிருந்து என்ன உள்ளக் குறிப்பு வெளியாகிறதோ அவற்றை எனக்கு நீ திரும்பி வந்து தெரிவிக்க வேண்டும்... பரதனுடைய எண்ணம், செய்கை, தோற்றத்தின் மாற்றம், சொல்லின் தன்மை அனைத்தையும் நீ தெரிந்து வரவேண்டும். சகல ஐசுவரியங்களும் நிறைந்த வம்ச பரம்பரையான ராஜ்யஸ்ரீயை நெடுங்காலம் அநுபவிக்க நேர்ந்தால் எப்படிப்பட்டவருக்கும் அதனிடம் பற்று உண்டாகிவிடும். பரதன் ராஜ்யத்தில் ஆசை கொண்டிருப்பதாகத் தெரிந்தால் ரகுநந்தனனான அவனே அதை இனியும் ஆண்டு வரட்டும்.''

ஆதியில் லக்ஷ்மணன் பரதனைச் சந்தேகித்தபோது அவனைப் பற்றி இமயமாகப் புகழ்ந்து பேசிய ராமனேதான் பின்னர் இப்படிப் பேசினான். இது ராமனின் கோளாறே, பரதனின் கோளாறே அல்ல; அதிகாரத்தின் கோளாறே! நெடுங்கால ஆட்சி அதிகாரம் பரதனையும் கெடுத்திருக்கக் கூடும் என்று ராமன் சந்தேகித்தான்.

அப்படிச் சந்தேகித்ததற்குத் தண்டனையையும் உவப்புடன் ஏற்றான் இன்று.

**பொ**ருளைத் தனக்கென வைத்துக் கொள்ளும் குணம் பரதனின் அண்மையிலேயே வர முடியாது. இதனால்தான் நரஸிம்மேதா கூறும் லோபத்தனம் சற்றும் அற்ற வைஷ்ணவ இலக்கணத்துக்கு அவனை உருவமாக்குகிறார் கனுதேசாய்.

ராமனுக்கு ஏற்பட்ட சந்தர்ப்பச் சூழலில் பரதன் இருந்திருந்தால் பரதனும் இன்னொரு ராமனாகத்தான் இருந்திருப்பான். அதே போல் பரதனுக்கு ஏற்பட்ட சந்தர்ப்பச் சூழலில் ராமன் இருந்திருந்தால் ராமன் இன்னொரு பரதனாகவே இருந்திருப்பான். எனவே ராமன் பெரியவனா, பரதன் பெரியவனா என்று ஒப்பிடுவதற்கில்லை. என்றாலும் அருணாசலக் கவி, ராம மாதாவான கௌசல்யையின் வாய்மொழியாக, ''எத்தனை ராமர்தாம் உனக்கிணை யாவரோ'' என்று பரதனிடம் பாடுகிறார். கம்பரும் முதலில் ஐயுற்ற அதே குகனின் வாயால்,

''ஆயிரம் இராமர் நின்கேழ்
ஆவரோ தெரியின் அம்மா?''

எனச் சாற்றுகிறார்.

ராமபிரானின் குண நலங்களைப் போற்ற வந்த பெரியாழ்வார், அவனது அடிபற்றும் பாதுகைக்கு முடிசூட்டிய இளவலைப் ''படியில் குணத்துப் பரத நம்பி'' என்கிறார்!

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும் சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.






காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!



# காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்




கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.6.21 TAM.

# ராமாயணம்

## ராஜாஜி

## 30. முன்னாள் நிகழ்ச்சி

கௌசல்யை, தசரதனை நிந்தித்துக் கொண்டேயிருந்தாள். அப்படிப் பேசுவதில் புத்திரனை இழந்த தன் பெருந் துக்கத்துக்கு ஒருவித ஆறுதலைக் கண்டாள்.

தசரதன் நிலைமையோ, ஒரு சிக்கலில் அகப்பட்டுப் போய்ப் பெரும் குரூரத்தைச் செய்ய வேண்டியதாக நேரிட்டது. தான் செய்த பிழையும் அதனால் ஏற்பட்ட அக்கிரமமும் அவன் அறியாதவன் அல்ல. ஆயினும் தரும சங்கடத்தினின்றும் தப்பும் வழியை அவன் காணவில்லை. தகப்பன் உத்தரவை மீறி ராஜ்யத்தை விடமாட்டேன் என்று ராமன் எதிர்த்துப் போர் செய்திருந்தால் தசரதனுக்குச் சந்தோஷமாகவே இருந்திருக்கும். தான் பிடிபட்ட வலையிலிருந்து தப்பித்துக் கொண்டிருப்பான். ஆனால், ராமனோ, 'தந்தையினுடைய உத்தரவை மீற மாட்டேன். காட்டுக்குப் போவதே என் கடமை' என்று தருமப் பிடிவாதம் செய்து காட்டுக்குப் போய்விட்டான். சீதையும் லக்ஷ்மணனும் ராமனோடு காட்டுக்குப் போவதே தங்களுடைய கடமை என்று யாருடைய யோசனையையும் கேட்காமல் தீர்மானித்துக் கொண்டு வனம் சென்று விட்டார்கள்.

இவ்வாறு ஏற்பட்ட நிலைமையில் அரசன் இன்னது செய்வது என்று தெரியாமல் தத்தளித்து அரை ஜீவனாக இருக்கும் சமயத்தில், கௌசல்யை தனக்குத் தோன்றின நியாயத்தையெல்லாம் சொல்லித் தசரதனுடைய குற்றத்தை வெகு கடுமையான முறையில் குத்திக் குத்திக் காட்டிப் பேசினாள்.

''யாரைப் பற்றி உமக்கு என்ன கவலை? நீர் சத்தியம் தவறாமல் இருந்து விட்டால் உமக்குப் போதும். இளம் பெண்ணோடு சுகமாக இருப்பதில் உமக்குத் திருப்தி ஆகி விட்டது. எனக்கு யார் கதி? ஸ்திரீகளுக்குப் புருஷன்தான் கதி. நான் அடைந்த புருஷனோ வேறு மனைவியுடன் சேர்ந்து கொண்டு என்னைக் கைவிட்டு விட்டான். என் மகனோ காட்டுக்குப் போய்விட்டான். என் பிறந்தகத்துப் பந்துக்கள் தூர தேசத்திலிருக்கிறார்கள். புருஷன் உயிரோடு இருக்க அங்கே போய் நான் எப்படிப் பந்துக்களை அண்டிப் பிழைக்க முடியும்? நிர்க்கதியாக நிற்கிறேன். உமக்கு இதைப் பற்றியெல்லாம் என்ன கவலை? கைகேயியும் பரதனும் சுகமாக இருந்தால் உமக்குப் போதும். நீர் ஒன்றும் யோசிக்க வேண்டாம். ராமன் காட்டில் பதினான்கு வருஷங்கள் கழித்துத் திரும்பி வந்தாலுங்கூட உம்முடைய சுகத்தை அவன் கெடுப்பான் என்று பயப்பட வேண்டாம். ராமன் திரும்பி வந்தாலும் பரதன் ஆண்ட ராஜ்யத்தை அவன் மறுபடியும் தீண்டமாட்டான். வேறு மிருகம் கொன்று தின்ற மாமிசத்தின் மிகுதியைக் காட்டுப் புலி தீண்டாது. மீன் தன் குஞ்சுகளைக் கொன்று தின்று விடுவது போல் பெற்ற பிள்ளையைக் கொன்றீர்.''

இவ்விதமாகக் காயம் பட்ட புண்ணில் குத்திக் குத்தி வேதனை செய்யும் முறையில் புருஷனைத் தாக்கிப் பேசிக் கொண்டேயிருந்தாள் கௌசல்யை.

இந்தப் பேச்சைக் கேட்டு வேதனைப் பட்ட அரசன், ''என்னுடைய கதி ஏன் இப்படியாயிற்று?'' என்று பால்யகாலத்து நிகழ்ச்சிகளை மனத்துக்குக் கொண்டு வந்து சிந்தனையில் ஆழ்ந்தான்.

பிறகு கொஞ்ச நேரம் கழித்துப் பெருமூச்சு விட்டுக் கண்களைத் திறந்து பார்த்தான்; பக்கத்தில் கௌசல்யை இருக்கக் கண்டான்.

பூர்வ காலத்து நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்து தசரதனுடைய துக்கம் இரு மடங்காயிற்று. இந்தப் பரிதாப நிலையில் மனைவியைப் பார்த்து இரு கைகளும் கூப்பி, ''கௌசல்யே, என் பேரில் இரக்கம் கொள்!'' என்று அழுதான்.

''அந்நியர்கள் செய்த குற்றத்தைக் கூட நீ எப்போதும் மன்னித்து விடுவாயே? ஏன் என்பால் இப்படி நடந்து கொள்கிறாய்? புருஷனானவன் கெட்டவனாயிருந்தாலும் மனைவிக்கு அவனே தெய்வம் என்றெல்லாம் பெரியோர்கள் சொல்லுகிறார்களே. பெருந் துக்கத்தை நீ அடைந்தாய் என்பது உண்மை. ஆயினும் என்னை இப்படிப் பேசி நீ இம்சிக்கலாமா?'' என்றான்.

இதைக் கேட்ட கௌசல்யை, ''படையெடுத்து வரும் சத்துருவால் ஏற்படும் துன்பங்களைவிட உள்ளே வேலை செய்யும் துக்கத்தால் உண்டாகும் தாபம் பெரிது. என்னால் தடுத்துக் கொள்ள முடியவில்லை. மன்

விப்பீராக! ராமன் வனம் சென்று ஐந்து ராத்திரி யாயிற்று என்று கணக்குச் சொல்லுகிறார்கள். ஐந்து வருஷங்கள் ஆனதைப் போல் அல்லவா எனக்குத் தோன்றுகிறது. அவனை நினைந்து நினைந்து எனக்கு உண்டாகும் துக்கம், நதிகளில் வெள்ளம் பொங்கிப் பெருகுவது போல் அதிகரிக்கிறது! நான் என்ன செய்வேன்? இந்தத் துயர வெள்ளத்தில் நான் என் வசமிழந்தேன். என்னை மன்னிப்பீராக'' என்றாள்.

இவ்வாறு கௌசல்யை பேசிய அன்பான மொழிகளைக் கேட்டுத் தசரதன் கொஞ்சம் ஆறுதலடைந்தான். அந்தச் சமயம் சூரியன் மறைந்து இருள் மூட ஆரம்பித்தது. வேதனையால் ஒய்ந்து போன அரசன் மெல்லத் தூங்கிப் போனான்.

* * *

அர்த்த ராத்திரியில் மறுபடியும் தசரதன் விழித்துக் கொண்டு பக்கத்தில் கௌசல்யா தேவி இருப்பதை அறிந்தான்.

''பிரியமானவளே! இருக்கிறாயா பக்கத்தில்? கர்ம பலனை மாற்ற முடியாது. நான் செய்த பாவத்தின் விளைவை இப்போது அனுபவிக்கிறேன். அற்ப சந்தோஷங்களுக்காகப் பெருந் தீமை விளைவிக்கக் கூடிய காரியத்தை அறியாமையால் மக்கள் செய்து விடுகிறார்கள். பிறகு பயனை அநுபவிக்கும் போது வருந்துகிறார்கள். நான் சிறுவனாக இருந்த காலத்தில் குறியைப் பார்க்காமல் ஓசையைக் கேட்டு அம்பு எய்யும் திறமை பெற்றிருந்தேன். இந்தச் சாமர்த்தியத்தின் அற்ப சந்தோஷத்துக்காக ஒரு காலத்தில் நான் பெரும் பாவத்தைச் செய்ய நேர்ந்தது. அந்த நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன், கேள்'' என்று ஆரம்பித்தான். ''அக்காலத்தில் நீ என்னை வந்து அடைந்திருக்க வில்லை. ஒரு



நான் இரவில் தேர் ஏறிச் சரயூ நதிக் கரையில் வேட்டையாடப் போனேன். மழை பெய்து மலை தாதுக்களும் புது மண்ணும் கலந்து பலவித நிறங்களில் ஜலம் எங்கு பார்த்தாலும் ஆறு களாக ஓடிக் கொண்டிருந்தது. பட்சி களின் சத்தம் ஒடுங்கிப் போய் வனம் தூங்கினாற் போல் இருந்தது. இரவில் தண்ணீர் குடிக்கப் புலி, கரடி முதலிய மிருகங்கள் வரும் சப்தத்தை வைத்துக் குறி பார்த்து அம்பு எய்யும் பயிற்சி எனக்கு இருந்தபடியால் அதைப் பயன் படுத்திப் பரீட்சிக்கலாம் என்று ஆசை தோன்றிற்று. நல்ல இருட்டு. அந்தச் சமயம் ஒரு யானை தண்ணீர் குடிக் கும் சப்தம்போல் ''பொளு, பொளு'' வென்று கேட்டது. உடனே சாமர்த் தியமாகச் சப்தத்தைக் குறி வைத்து அம்பை எய்தேன். என்னுடைய அம்பு விஷ சர்ப்பம் போல் பாய்ந்து சரி யாகவே போய்க் குறியைத் தாக்கிற்று. 'ஐயோ! செத்தேன்!' என்று ஒரு மனிதக் குரல் கிளம்பியதைக் கேட்டுத் திடுக்கிட்டேன்.

'''என்பேரில் யாருக்குத் துவேஷம்? நான் யாருக்கும் ஒரு குற்றமும் செய்யவில்லையே? தண்ணீர் மொண்டு போக வந்த என்னை எவனோ கொன் ருனே ! என்ன பயனைக் கருதி என் னைக் ,கொன்றான்? நான் ஒரு பாவமும் செய்ய வில்லையே. விரத வாழ்க்கை வாழும் தபஸ்வியான என் பேரில் யாருக்கு என்ன விரோதம்? கண்ணில் லாத என் கிழத் தாயும் தகப்பனும் இனி என்ன செய்வார்கள்? என் னையே நம்பியிருந்தார்களே, அவர்கள் இனி எப்படி உயிர் வாழ்வார்கள் ? ஐயோ, நான் இப்படி அநியாயமாகக் கொல்லப்பட்டேனே !' என்று பரி தாபக் குரலில் ஒருவர் அழுத வார்த்தைகளைக் கேட்டேன். பெருந் திகிலடைந்து என் வில்லும் கையி லிருந்த அம்பும் கீழே நழுவி விழுந்தன.

''அழுகுரல் வந்த இடம் நோக்கிச் சென்றேன். தலை முடி விரிந்து சிதறி, உடல் எல்லாம் ரத்தமும் சேறுமாகத் தரையில் புரண்டு கொண்டிருந்த ஒரு தபஸ்வியைக் கண்டேன். பக்கத்தில் தண்ணீர்க் குடம் உருண்டு கிடந்தது. என்னைப் பார்த்ததும் அவர் கண்களி லிருந்து வீசிய ஒளி என்னைச் சுடும் போலிருந்தது.

'''பாவி, நீயா என்னைக் கொன்றது? தண்ணீர் மொள்ள வந்த என் பேரில் ஏன் அம்பு எய்து கொன்றாய்? கண் ணிழந்த வயோதிகப் பெற்றோர் ஆசிர மத்தில் தாகத்தோடு காத்திருக் கிறார்களே! நான் தண்ணீர் எடுத்துக் கொண்டு வருவேன் என்று இப் போதும் எதிர்பார்த்துக் கொண்டிருப் பார்கள். அட, பாவி! ஏன் என்னைக் கொன்றாய்? ஐயோ தெய்வமே! என் தவமும் விரதமும் வேத அத்யயனமும் வியர்த்தமாய்ப் போயிற்றா ? நான் இப்படி அடிபட்டுக் கிடக்கிறேன் என் பது என் வயோதிகத் தாய் தந்தை யருக்குத் தெரியாதே! 'வருவான், வருவான்' என்று எதிர்பார்த்தவண்ண மாகவே இருப்பார்கள் ! விஷயம் தெரிந்தாலும் நடக்க முடியாத கபோதிகள் என்ன செய்வார்கள் ? நீ யார்? கோசல தேசத்து அரசன் அல்லவா ? என்னை அரசனு கொன் றான்? சரி, அரசனே! நீயே போய் அவர்களுக்கு விஷயத்தைச் சொல்லி அவர்கள் காலில் விழுந்து சரணடை வாய். இல்லாவிடில் அவர்களுடைய கோபம் உன்னை எரித்து விடும். அவர் களுடைய சாபம் உன்னைச் சாம்ப லாக்கி விடும். தாமதமின்றி அவர்கள் கிடக்கும் ஆசிரமத்துக்கு நேராகப் போவாய். இங்கிருந்து அவ்விடத் துக்கு ஒற்றையடிப் பாதை போகிறது. அதன் வழியாகச் சீக்கிரம் சென்று உன்னைக் காப்பாற்றிக் கொள். ஐயோ! இந்த அம்பு என் பிராணனை வேதனை செய்கிறது. இதை இழுத்து எடுத்து விட்டுப் போ' என்றார் தபஸ்வி.

''தபஸ்வியின் உடலில் பாய்ந்திருந்த அம்பைப் பிடுங்கினால் அவருடைய வேதனை தீரும். ஆனால் என் கையால் உடனே அவர் உயிரும் போய்விடும் படியான காரியத்தைச் செய்ய மனம் வரவில்லை. இந்தத் தர்மசங்கடத்தில் நான் ஒன்றும் செய்யத் தோன்றாமல் ஒரு கணம் திகைத்து நின்றேன்.

''அப்போது அந்த முனிகுமாரர், 'யோசிக்க வேண்டாம். அம்பைப் பிடுங்கிவிட்டு என் வேதனையைத் தீர்த்து விடு. ஸ்திரசித்தமடைந்துவிட் டேன். உன் பாவத்தைப் பற்றி யோசிக்காதே! தைரியமாக அம்பைப் பிடுங்கி எறிந்து என் உயிர் வெளி யேறச் செய்வாய்' என்று சொன்னார்.

''அம்பைப் பிடித்து மெதுவாக இழுத்து விட்டேன். உடனே தரை யில் புரண்டு வேதனைப்பட்டுக் கொண் டிருந்த தபோதனர் என்னைப் பார்த்த வண்ணம் பெருமூச்சு விட்டு உயிர் நீத்தார்.

''இந்தப் பாவமல்லவா என்னை இப்போது வாட்டுகிறது? கபோதி யான அந்தப் பெற்றோர்கள் பட்ட துக்கத்தை நான் இப்போது அனுப விக்கிறேன்'' என்றான். (தொடரும்)



சிலையைத் தேடி...
2
கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி..
வழியில் இருந்த சைக்கிளில் ஏறி விரைந்த நீலாவையும் ரவியையும் சீனக் கம்யூனிஸ்ட் சிப்பாய்கள் துரத்துகிறார்கள். ரவியின் கால் கெந்திக்கிறது. அடுத்த ஊருக்குள் நுழைந்ததும் சைக்கிளை உதறிவிட்டு ஓடுகிறார்கள்.




ரவி, ஓடி வா. இந்த மாதாக் கோவிலுக்குள் போய் ஒளிந்து கொள்ளலாம். சீனச் சிப்பாய்கள் இங்கு வந்து சோதனையிட மாட்டார்கள்...




பாதிரியார்தான் பயப்படாதே.
குழந்தைகளே, இங்கே என்ன செய்கிறீர்கள்?




அடுத்த ஊருக்கு அவசரமாகப் போக வேண்டி இருந்தது. அதனால் வழியில் கிடந்த ஒரு சைக்கிளில் ஏறிக் கொண்டு வந்தோம். அதனால் சீனச் சிப்பாய்கள் துரத்திக் கொண்டு வருகிறார்கள். நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்.




கம்யூனிஸ்ட்களின் சோதனைக்கு உட்படாத இடமே கிடையாதே. இந்தப் பெரிய 'சர்ச்சில்'தான் உபதேசப் பிரசங்கம் புரியும் 'பல்பிட்'தான் பத்திரமான இடம். அங்கே போய் ஒளிந்து கொள்ளுங்கள்.




மிக மிக நன்றி ஃபாதர்.
கர்த்தர் உங்களைக் காப்பாற்றுவாராக.


தேடி வந்த சிப்பாய்களை, நாதியற்று நடுவீதியில் கிடந்த சைக்கிள் வரவேற்றது...
இதோ சைக்கிள். அந்தச் சைத்தான்கள் எங்கே?
அதிக தூரம் போயிருக்க முடியாது. அவர்களைக் கண்டு பிடித்துத் தண்டித்தாக வேண்டும். திருட்டுக் கழுதைகள்!


எனக்கென்னவோ அவர்கள் நம்மிடம் சிக்குவார்களா என்று சந்தேகமாக இருக்கிறது.
அதோ அந்தச் சர்ச்சுக்குள் போய்ப் பார்த்தால் என்ன?


சர்ச்சினுள் முழங்காலிட்டுப் பிரார்த்தித்துக் கொண்டிருந்த பாதிரியாரைத் தவிர வேறு யாருமில்லை....
ஃபாதர் எங்களுக்காகச் சில விநாடிகள் செலவிட முடியுமா? ஒரு இந்தியச் சிறுமியும் அவள் தம்பியும் கையில் ஒரு பொம்மையுடன் இங்கு வந்தார்களா?


பிரார்த்தனைக்கு மக்கள் வருவதற்கான நேரமல்ல இது. நான் யாரையும் பார்க்கவில்லை.
அவர்களுக்கு நீங்கள் அடைக்கலம் கொடுத்திருந்தால் உமக்கு ஆபத்து தான். நினைவிருக்கட்டும்...


இந்த வேளையில் பிரசங்கம் புரியும் 'பல்பிட்'டில்..
நீலா, எனக்கு அடக்க முடியாமல் தும்மல் வருகிறதே!
ஐயோ, தும்மி விடாதே! சிப்பாய்கள் இன்னும் போகவில்லை. தும்மலை அடக்கு.. அடக்கு..


ஆனால் ரவியினால் தும்மலை அடக்க முடியவில்லை....
ஹா..ச்..சூ...
அது என்ன சத்தம்..?

தொடரும்...

# ஜென்டில்

**விலையுயர்ந்த ஆடைகளை வீட்டிலேயே பத்திரமாக சலவை செய்ய!**




## ஒவ்வோர் ஆடைக்கும் ஆகும் செலவு 15 பைசாதான்!

புத்தம் புதிய திரவ டெடர்ஜண்ட் ஜென்டில், உங்கள் விலையுயர்ந்த ஆடைகள் அனைத்தையும் வீட்டிலேயே சிறப்பாக சலவை செய்வதற்காக பிரத்யேக செய்முறையின் மூலம் தயாரிக்கப்பட்டுள்ளது. பட்டு, கம்பளி, நைலான், ரேயான், 'டெரீன்' முதலான துணிகளை ஜென்டில் மிகமிக மென்மையாகவும் மேன்மையாகவும் சலவை செய்யும். பின்னர் அத்துணிகள் புத்தம் புதியவைபோல் தோற்றமளிக்கும். உங்கள் ஜரிகைப் புடவைகளைக்கூட நீங்கள் ஜென்டிலால் சலவை செய்யலாம்; ஜரிகை பளபளப்புடன் புது மெருகு பெற்றுத் திகழும். ஜென்டில் மிகவும் சிக்கனமானது!

ஒரு பாட்டில் ஜென்டில் சுமார் 35 ஆடைகளை சலவை செய்யப் போதுமானது! —அதாவது, ஓர் ஆடைக்கு ஆகும் செலவு 15 பைசாதான்! பத்திரமாக சலவை செய்யும் சிக்கனமான ஜென்டில் இன்றே உபயோகித்துப் பாருங்கள்!

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்.

Shilpi SOM/6A/69 Tamil

# பக்கத்து வீட்டுப் பிரமுகர்

மின்சார சாதனங்கள் விற்பனை செய்யும் ஸ்தாபனம் ஒன்றின் உரிமையாளரான திரு கே. என். ராகவன், சமீபகாலமாகத் தம் அண்டை வீட்டுக்காரராக வந்து சேர்ந்திருக்கும் 'இலங்கேசுவரன்' மனோஹரரைப் பற்றிச் சொல்கிறார்:

எல்லோரும் இவரை 'இலங்கேசுவரன்' என்று குறிப்பிடுகிறார்கள், அல்லவா? ஆனால் நான் இவரை 'இலங்கா அசுரன்' என்றுதான் அழைக்க ஆசைப்படுகிறேன். காரணம் உண்டு. இவர் செய்யும் சில காரியங்கள் அசுரத்தனமானவை. அதிகாலை நான்கு மணிக்கு எழுந்திருந்து நாலேகாலுக்கு மரீனா கடற்கரைக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறார். அங்கே, கார் ஓடும் தார் ரோட்டில் நீள நெடுக, மூச்சு வாங்க, ஓட்டப் பயிற்சி. அதோடு நிறுத்துவதில்லை. அதே அளவுக்குப் பக்கத்திலுள்ள மணற் பரப்பிலும் ஓடுகிறார். தார் ரோடு பொதுவான உடற் பயிற்சிக்கும் மணல் பரப்பு, கால்களின் உறுதிக்கும் உதவுகின்றனவாம். ஒரு நாள் விட்டு ஒரு நாள் வீட்டுக்கு வந்தவுடன் பிராணாயாமம் வேறு செய்கிறார்.

"என்னையா? இந்த ஓட்டப் பந்தயம் எல்லாம் எதற்கு?" என்று கேட்டால் அதற்கும் சரியான பதில் வைத்திருக்கிறார்.

இவர் ஏற்கும் பாத்திரங்கள் அனைத்துமே உள்ளத்திலும் உடலிலும் வன்மையைக் காண்பிக்க வேண்டிய பாத்திரங்கள். அந்த வன்மை வெளிப்பட வேண்டுமானால் உடற் கட்டைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அதற்கு இந்த ஓட்டப் பயிற்சி மிகவும் உதவுகிறதாம்.

சினிமாவிலும் நாடகத்திலும் அஞ்சா நெஞ்சினராகத் தோன்றுவது போல், வாழ்க்கையிலும் எதற்கும் பயப்படுவதில்லை- ஒரே ஒரு விஷயம் தவிர. அரிசியைக் கண்டால் அலறுவார்! ஆம்! அரிசிச் சாதம் இவர் சாப்பிடுவதில்லை. 'தொந்தி' விழுந்து விடுமோ என்ற பயம்தான் காரணம். எல்லாம் கோதுமைதான்! இந்தக் கோதுமைக்கு அந்தக் காலத்திலேயே நன்கு பழக்கப் படுத்திக் கொண்டு விட்டார்! இரண்டாவது உலகப் போரில் யுத்த சேவை செய்தவராயிற்றே!

அரிசியை ஒதுக்குவது போல் பகல் தூக்கத்தையும் ஒதுக்குகிறார்! பகல் தூக்கமும் 'தொந்தி'க்குக் காரணமாக இருக்கிறது என்று யாரோ சொல்லியிருக்கிறார்கள். தொந்தி விழுந்து விட்டால் இவரது கம்பீரம் குறைந்து போகாதா?

சென்னை பச்சையப்பன் கல்லூரி மாணவராக இருந்தபோதே இவருக்கு நாடக மேடை ஈடுபாடு தோன்றி விட்டது. சம்பந்த முதலியார் எழுதிய நாடகங்களில் பங்கேற்று நடிக்க ஆரம்பித்தார். அந்த ஆர்வம், சரித்திர இதிகாச நாடகங்களைத் தமிழில் அமர்க்களமாக நடித்துக் காட்டும் வரையில் இன்று வளர்ந்திருக்கிறது. 'எக்மோர் டிராமாடிக் சொஸைட்டி' இவருக்குப் பயிற்சிக் களமாக உதவியிருக்கிறது.

'இலங்கேசுவரன்' நாடகக் கையெழுத்துப் பிரதி இவரிடம் வந்து சேர்ந்தது. படித்தார். வைத்தார். திரும்பிப் படித்தார். மீண்டும் போட்டு வைத்தார். புரட்சிகரமான கருத்துள்ள அந்தப் புராணச் சித்திரத்தை மேடை ஏற்றுவதில் தயக்கம் தான் வளர்ந்ததே தவிர துணிவு பிறக்க


ராகவன் - மனோகர்

வில்லை. ஆனால் அந்த நாடகத்தை எழுதிக் கொடுத்த துறையூர் மூர்த்தி இவரைத் தூண்டிக் கொண்டே யிருந்தார்.

கடைசியில் மனோஹர், 'இலங்கேசுவரன்' நாடகத்தைத் தயாரித்து அரங்கேற்றினார். எங்கும் நல்ல வரவேற்பு. ஆர். எஸ். மனோஹர் 'இலங்கேசுவரன்' மனோஹர் ஆனார்.

இந்தப் பட்டம் அவருக்கு எங்கே சூட்டப் பட்டது தெரியுமோ? இலங்கையிலேயே தான்! 1957ல் தம் நாடகக் கோஷ்டியுடன் இலங்கைக்குப் போயிருந்த மனோஹர் அங்கே முப்பத்திரண்டு தடவைகள் 'இலங்கேசுவரன்' நாடகத்தைப் பல வெளி நாட்டு ரசிகர்கள் முன்னும் இலங்கை ரசிகர்கள் முன்னும் நடித்துக் காட்டினார். இலங்கை ரசிகர்கள் கொஞ்சம்கூடத் தயங்காமல் பட்டத்தைத் தூக்கிக் கொடுத்து விட்டார்கள். அதை இவர் தம்முடன் எடுத்து வர எந்தச் சுங்க இலாகாவும் தடை செய்யவில்லை!

இந்த 'இலங்கேசுவரன்' நாடகத்தை மாத்திரம் இது வரை அறுநூறு தடவைகளுக்கு மேல் மேடை ஏற்றியிருக்கிறார்!

இவருக்கு ஓய்வு கிடைத்தால், அதைப் புத்தகங்கள் படிப்பதின் மூலம்தான் கழிக்கிறார். இவருடைய நாடகக் குழுவுக்கென்று ஒரு புத்தக சாலையையே தயார் செய்திருக்கிறார். ஒரு சரித்திர நாடகத்தைப் புதிதாகத் தயாரிக்க நினைத்தால், அந்த நாடக கால சரித்திர ஆராய்ச்சிப் புத்தகங்கள் அனைத்தையும் வாங்கி வரச் செய்து, பரீட்சைகளுக்குப் படிக்கும் மாணவன் போல் அவை அனைத்தையும் படித்து முடிப்பார். பிறகு பாத்திரத் தன்மைகளைப் பற்றிச் சக நடிகர்களுடன் விவாதிப்பார். அப்புறம்தான் நாடகத்தை மேடையேற்றுவது பற்றிச் சிந்திப்பார். இதற்காக வாங்கப்பட்ட புத்தகங்களே வாசக சாலையாக மாறி இருக்கிறது.

இப்போது இவர் சிந்தனைகளை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பவர் திப்பு சுல்தான்! 'பாளைய திலகம்' என்ற பெயரில் திப்பு சுல்தானின் கடைசி நாட்களைச் சித்திரிக்கும் நாடகம். நண்பர்களுடன் மைசூர் ராஜ்யத்திலுள்ள ஸ்ரீரங்கபட்டணத்துக்குப் போய், நிறைய விஷயங்கள் சேகரித்துக் கொண்டு வந்திருக்கிறார். திப்பு சுல்தான் வாழ்ந்த மாளிகைச் சுவர்களில் தீட்டப் பெற்றிருக்கும் ஓவியங்களையெல்லாம் புகைப்படமெடுத்து வந்திருக்கிறார். அந்தப் படங்கள் அந்த நாளைய ஆடை அணிகலன்களைப் புரிந்து கொள்ள உதவுமாம்.

எனக்குத் தெரிந்தமட்டில் அனேகமாக இந்தப் 'பாளைய திலகம்' நாடகத்தில்தான் மனோஹர் சட்டை போல் ஏதாவது மேல் அங்கி போட வேண்டி யிருக்கும். இதுவரை அவர் தாங்கி வரும் பாத்திரங்கள் எதற்கும் சட்டை தேவைப்படவில்லை.

இவருடைய மற்றொரு வெற்றி நாடகமாகிய 'துரோணர்' தயாரிப்பிலும் இவருக்குப் பல ஐயப்பாடுகள் தோன்றியதுண்டு. 'துரோணருக்கு நாமம் உண்டா இல்லையா?' 'பாரத்துவாஜர் என்று குறிப்பிடுவதா, பரத்துவாஜர் என்று குறிப்பிடுவதா?' போன்ற சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்ள டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகளை அணுகினார் இவர். தெளிவு பிறந்தது.

கோவையில் 'துரோணர்' நாடகம் நடக்க ஏற்பாடாகி யிருந்தது. திறந்தவெளி அரங்கம். ஏகப்பட்ட ரசிகர்கள் குழுமி யிருந்தார்கள். நாடகம் ஆரம்பித்த சற்று நேரத்துக்கெல்லாம் மழை கொட்ட ஆரம்பித்துவிட்டது. மழை நிற்பதற்கான அறிகுறிகள் இல்லை. நாடகத்தை நிறுத்தி, படுதாக்கள் பாழாகிவிடக் கூடாதே என்ற பயத்தில் அவற்றைக் கழற்றி விட்டார்கள்.

ஆனால் ரசிகர்கள் கலையவே யில்லை. எத்தனை நேரமானாலும் மழை நின்ற பிறகு இருந்து நாடகம் பார்த்துவிட்டுத்தான் போவோம் என்று உட்கார்ந்து விட்டார்கள். அவர்கள் விருப்பம் வீண் போகவில்லை. மழை நின்றபிறகு மீண்டும் படுதாக்களைக் கட்டி நாடகம் நடத்தத் தயாரானார் மனோஹர். அன்று துரோணர் நாடகம் முடிந்தபோது கிழக்கு வெளுக்க ஆரம்பித்திருந்தது.

இந்தப் பொல்லாத ரசிகர்கள் எல்லா நாடகங்களையுமா இப்படி வரவேற்கிறார்கள்? ஹூஹூம்! இலங்கேசுவரனைத் தொடர்ந்து நிறையச் செலவு செய்து 'உபகுப்தன்' என்ற நாடகத்தைத் தயாரித்தார். பளபளவென்று மின்னும் வெறும் தலையுடன் பௌத்த பிக்ஷுவாக வந்தார். இலங்கேசுவரனின் கோலத்தில் அரச மிடுக்குடன் அவரை மேடையில் பார்த்த ரசிகர்கள், அவரை இந்த பிக்ஷு கோலத்தில் ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை. இதை உணர்ந்த மனோஹர் 'உபகுப்தர்' நாடகத்துக்கு ஓய்வு கொடுத்து விட்டார்!

இவர் சும்மா இருக்கும்போதும் சரி, மேடையில் வேடம் தாங்கி யிருக்கும் போதும் சரி, சுறுசுறுப்புடன்தான் இருப்பார். இவர் நாடகங்களில் காட்சி மாறுதல்கள் மின்னல் வேகத்தில் நடக்கும். தேவையான உபகரணங்களை எடுத்துக் காட்சிகளில் வைக்க மற்ற உதவியாளர்களை எதிர்பார்ப்பதில்லை. நடிகர்களே அதையும் செய்கிறார்கள். நேரம் மிச்சமாகிறது.

எந்தச் சமயத்திலும் எந்த நடிகரும் எந்த உப பாத்திரத்தையும் ஏற்க வேண்டி வரும் என்ற அடிப்படையிலேயே நாடகங்கள் தயாரிக்கிறார். சில பாத்திரங்களுக்கு முன்னேற்பாடாக இரண்டு நடிகர்களையும் தயார் செய்கிறார்.

இசைக் குழுவினரையும் நாட்டியக் குழுவினரையும் வெளி நாடுகளுக்குக் கலைத் தூதுவர்களாக அவ்வப்போது அனுப்பி வைக்கும் அரசாங்கம் ஏன் இந்திய நாடகக் குழுக்களை அவ்வாறு அனுப்பத் தயங்குகிறது என்பது இவருக்குப் புரியவில்லை. இப்படிப்பட்ட பொது விஷயங்களை அவகாசம் கிடைக்கும்போது நாங்கள் பேசி விமரிசிப்போம். அமைதி நிறைந்த நண்பர். ஆர்ப்பாட்டமெல்லாம் மேடையிலும் திரையிலும்தான்.

பேட்டி: **கோமதி சுவாமிநாதன்**

# கண்ணாடி உடைகிறது...



# பிரைட்* பிளாஸ்டிக் சாமான்கள் உடையாது





கண்ணாடியின் எழில், உலோகத்தின் உறுதி, ஆனால் இவற்றின் குறைபாடுகளற்றது—அதுதான் உங்களுக்கான பிளாஸ்டிக். இலேசு, நீடித்த உழைப்பு, வண்ணங்கள், சுத்தம், வசதி, இவையனைத்தையும் உங்களுக்கென அற்புதமாக இணைத்து வழங்குகிறது பிரைட் பிளாஸ்டிக்.

பிரைட் பிளாஸ்டிக்கில் விதவிதமான வகைகள், வகை வகையான பொருட்கள். அளவிலாப் பயனளிக்கும் ஏராளமான சாமான்கள். சீப்புகள், தட்டுகள், சோப்புப் பெட்டிகள், குவளைகள், ஜாடிகள், சாமான் கூடைகள், வாளிகள், பேஸின்கள், டிரேக்கள், இன்னும் பலப்பல.

**பிரைட்*** தான் உங்கள் சரியான தேர்ந்தெடுப்பு!



பிரைட் பிரதர்ஸ் பிரைவேட் லிட்.,
156—ஏ, தார்தேவ் ரோடு,
பம்பாய்-34.

BB.G.116 TM

# குடும்ப டால்கில் ஒரு தனிச்சிறப்பையே
# குடும்பத்தில் அனைவரும் எதிர்பார்க்கின்றனர்



சருமத்தை
மிருதுவாக்கி
அழகுபடுத்தும்
தன்மையை
எண்ணி
யிருக்கிறாள்
அவள்



அவனோ இதமும்,
புத்துணர்வும்
பெற வியர்வை
போக்கும் பவுடரை
விரும்புகிறான்



சுகந்த
நறுமணம்
சோபிதமான
வண்ணப்பெட்டி
இதுவன்றோ
இவர்களின்
தேவை




ULKA-CTB-31 TA

பினகா டால்கில்
அவர்கள் விரும்பும் அத்தனையும் அடங்கியுள்ளது

பினகா—பிடித்தமான குடும்ப டால்க்

C I B A Cosmetics



# சாருலதா

கி.ராஜேந்திரன்

அத்தியாயம் 2

## நட்பின் எல்லையில்

மனோதிடத்தை ஒருவன் பக்கபலமாகக் கொண்டிருந்தால்கூட லட்சிய வாழ்க்கையில் உயரே உயரே செல்வது எவ்வளவு கடினம்! ஆனால் ஒரு முறை சறுக்கி விட்டால் போதும் எவ்வளவு சுலபமாக அதள பாதாளத்தில் விழுந்து உழலலாம்! இதை உணர்த்துவதாகத்தான் நீலகிரி மலைச் சிகரங்களும் பள்ளத்தாக்குகளும் டாக்டர் வேணுவுக்குத் தோன்றின.

'மலைகளுக்கேகூடக் குளிர் எடுத்து மரகதப் பச்சை நிறத்தில் சால்வை போர்த்திக் கொண்டிருக்கின்றனவோ? வெண்மையான கம்பளிக் குல்லாய் அணிந்திருக்கின்றனவோ?' என்று எண்ணுமாறு தேயிலைத் தோட்டங்களும் மேகப் படலங்களும் காட்சி அளித்தன.

இந்த எண்ணத்தைச் சாருவுக்குச் சொல்ல வேண்டும் என்று நினைத்து வேணு அவளை நோக்கினான். அவள் ரசிக்க மாட்டாள் என்பது அடுத்த கணமே அவனுக்குப் புரிந்து விட்டதால் அவன் வாய் திறக்கவில்லை.

சாருவின் கண்கள் சாலையில் லயித்து இருந்தன. கரங்கள் ஸ்டியரிங்மீது லாகவமாக விளையாடிச் சுழற்றின. வளைவுகளும் நெளிவுகளும் ஏற்றங்களும் இறக்கங்களும் மிகுந்த மலைப் பாதையில் காரை விரைவாகச் செலுத்திக் கொண்டு போவதில் அவளுக்கு இருந்த ஆர்வம் அவள் முகத்தில் தெரிந்தது. மனம் காரை ஓட்டுவதில் முழுமையாக ஈடுபட்டிருக்க ஓர் அலட்சியமான அசுரத் திறமையுடன் அவள் இயங்கி வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தாள்.

''ஒரு இம்போர்ட்டட் ரேஸ் கார் இஞ்சினைப் பொருத்திக் கொண்டு இந்த மலையில் இவ்வளவு வேகமாக ஏறுவதில் என்ன சாமர்த்தியம் இருக்கிறது? 1935ம் மாடல் ஆஸ்டின் காரை ஊட்டிக்கு ஓட்டிச் சென்றாயானால் உன் திறமையைப் பாராட்டலாம்'' என்றான் வேணு.

இடுக்கிட்டவள்போல் ஒரு கணம் டாக்டரைப் பார்த்தாள் சாரு. அடுத்த விநாடி பார்வை சாலைக்குத் திரும்பியது.

'' உங்களுக்கு என்ன கோபம்? ராத்திரி சரியாகத் தூங்கினீர்கள் அல்லவா? காலையில் டிபன், காப்பி எல்லாம் நன்றாக இருந்ததல்லவா?''

''ஆகா! அப்ஸரா ஹோட்டலில் ஆனந்தமாய்த் தூங்கினேனே! நேரடியாக ஊட்டிக்கு வந்திருந்தால் ரொம்பக் களைப்பாக இருந்திருக்கும். கோவையில் இரவு தங்கியது நல்லதாயிற்று.''

''பிறகு ஏன் சிடுசிடுத்து விதண்டாவாதம் பண்ணுகிறீர்கள்?''

''எது விதண்டாவாதம்?''

''டாக்டர்! ஒரு நூறு ஹார்ஸ் பவர் ரேஸ் காரை மலைப் பாதையில் ஓட்டிச் செல்வது 1935ம் மாடல் ஆஸ்டினை ஓட்டுவதைவிடச் சிரமம்! தெரியுமா உங்களுக்கு?''

''தெரியாது!''

''தெரியாத விஷயத்தைப் பேசக் கூடாது!''

''தெரிந்த விஷயத்தைச் சொல்லட்டுமா?''

'' உம்.''

''நீ எதற்காகக் காதல் என்ற சொல்லைக் கேட்டாலே மிரளுகிறாய் என்று தெரியும்!''

''பூ. இதென்ன பெரிய காரியம்? ஷெர்லாக் ஹோம்ஸா வர வேண்டும், இதைக் கண்டுபிடிக்க? வர்த்தகத் தொழில் துறைகளில் நான் அடைந்து வரும் வேகமான முன்னேற்றம் கல்யாணத்தால் பாதிக்கப்படும். இது ஊர் அறிந்த ரகசியம்.''

''அந்த ஒரு காரணம் மட்டும்தானு சாரு ?''

''வேறு என்ன காரணம் இருக்க முடியும் ?''

''அதை நீ சொல்லு!''

''நான் என்னத்தைக் கூற? நீங்கள் தானே ஏதோ பெரிய ரகசியத்தைத் தெரிந்து கொண்டு விட்டதைப் போல் பேசினீர்கள் ?''

''அப்படியானுல் ரகசியம் ஏதோ இருக்கிறது என்று ஒப்புக் கொள் கிருய் !''

''நான் எதையும் ஒப்புக் கொள்ள வில்லே. அநாவசியமாக என் வாயைப்



பிடுங்கப் பார்க்காதீர்கள்! இன்னும் பத்து மைல்தான் இருக்கிறது. 'லெட் மீ கான்ஸன்டிரேட்'. இங்கு கவனக் குறைவாக இருந்தால் ஆபத்து!''

அவள் பேச விரும்பவில்லே என் பதை நாசூக்காகச் சொல்கிருள் என்று புரிந்து கொண்டான் வேணு. அவள் எப்போதுமே இப்படித்தான். உலகத்தி லுள்ள சகல விஷயங்களேப் பற்றியும் வம்பு வளர்க்கத் தயாராகக் காத் திருப்பாள். ஆனுல் அவள் சொந்த வாழ்க்கை பற்றிய பேச்சை யாராவது எடுத்தால் மரவட்டை போல அவள் மனம் சுருண்டு விடும். பல சந்தர்ப்பங் களில் இதைக் கவனித்து வேணு ஆச் சரியப்பட்டிருக்கிருன்.

உதக மண்டலத்தை அடைந்த பிறகு ரோஸ்மேரி எஸ்டேட்ஸ் எங்கே இருக்கிறது என்று சொல்லி அங்கு எப்ப டிப் போக வேண்டும் என்று விசாரித் தாள் சாரு. கார் மேலே விரைந்தது.

''வழி விசாரித்தது அந்த எஸ்டேட் டின் சொந்தக்காரி என்று தெரிந்தால் அவர்கள் என்ன நினேப்பார்கள்?'' என்று கேட்டான் வேணு.

''நினேக்க என்ன இருக்கிறது ? நான் இந்த எஸ்டேட்டை வாங்கி நாலு மாதங்கள்தானே ஆகிறது? இப் போதுதானே முதல் முறையாக அதைச் காண வருகிறேன் !''

''தொள்ளாயிரம் ஏக்கர்! இதுவே சம வெளியில் இருந்தால் ஜமீந்தாரிணி போல் உன்னே மதிப்பார்கள்; இங்கே எஸ்டேட் முதலாளிதான் நீ !''

''உச்சவரம்பு இருக்கும்போது சம வெளியில் தொள்ளாயிரம் ஏக்கர் எங்கே கிடைக்கும்? அதற்காகத்தான் ம. எஸ்டேட் வாங்குவது.''

''கறுப்பும் வெளுப்புமாய்ப் பணத் தைக் கொட்டி....!''

''அதோடு விட்டால் தேவலேயே, இந்த எஸ்டேட்டின் சொந்தக்காரன்...''

''முன்னுள் சொந்தக்காரன்....''

''....தென் ஆப்பிரிக்கப் பிரஜையான இந்தியன். 'கால்வாசிப் பணமாவது ஸ்டர்லிங்கில் கொடுக்கக் கூடாதா?' என்று மூக்கால் அழுதான். கொடுத்துத் தொலேத்தேன்.'' சாரு குரலில் பெருமை தொனித்தது.

''ஆமாம், ஸ்விஸ் பாங்கில் இருக்கும் பணத்துக்கும் ஏதாவது செலவு வேண்டாமா ?''

''பெயர் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா ?''

'' சாருலதா....சாருலதா!'' அந்தப் பெயரை உச்சரிப்பதிலேயே இன்பம் அடைந்தவன் போல் காணப்பட்டான் வேணு. ''சாருலதா என்ற பெயர் ரொம்பப் பிடித்திருக்கிறது சாரு. ஆனல் அது உன் பெயர் என்ற நினேப்பிலேதான் இனிக்கிறது. கண்களுக்குத் தென்படுவனவெல்லாம் 'சாருலதா' என்ற பெயர் தாங்கி நிற்க வேண்டும் என்ற எண்ணம் பிடிக்கவில்லே!''

''நான் அப்படி எங்கே நினேக்கிறேன்? எனக்குச் சொந்தமானவை என் பெயரைத் தாங்கி நிற்பதில் தவறென்ன?''



'' எந்தப் பெயர் ? ஸ்விஸ் கரன்ஸியின் பெயரா ?''

''எந்த நாட்டு நோட்டுக்களானலும் பெயர் காதுக்கு இனிமையாகத்தான் இருக்கும். நான் கேட்டது, எஸ்டேட்டின் பெயரைப் பற்றி.''

'' 'ரோஸ்மேரி எஸ்டேட்ஸ்'..... ரொம்ப அழகான பெயர்தான்.''

''அதை மாற்றிவிடப் போகிறேன்.''

'' தெரியுமே, எனக்குப் பிடிக்கிறது என்று சொன்னல் உடனே மாற்றிவிடுவாயே ?''

'' ஏன், சாருலதா என்ற பெயர் பிடிக்க வில்லேயோ உங்களுக்கு?''

''தவறு என்று சொல்லவில்லே ; ரசனேக் குறைவைச் சுட்டிக் காட்டினேன். சாருலதா என்டர்பிரைஸஸ், சாருலதா டீ எஸ்டேட், சாருலதா ஸிமெண்ட் ஒர்க்ஸ், சாருலதா இன்ஜினீரிங், சாருலதா 'திஸ்', சாருலதா 'தட்' !''

''ஏன், பாக்கியெல்லாம் மறந்துவிட்டதா ?''

''நாக்கு மரத்து விட்டது, சொல்லிச் சொல்லி. ஆனல் உனக்குக் கேட்க ரொம்ப ஆசையாக இருக்கும்.''

''அதில் குற்றமென்ன ? நானே என் திறமையாலும் சாமர்த்தியத்தாலும்

உருவாக்கியது இந்த.... அதற்கு என்ன பெயர் சொன்னீர்கள் ?''

''தொழில் வர்த்தக சாம்ராஜ்யம்.''

''எஸ்! நான் நியாயமான பெருமை அடைகிறேன்.''

''அறிவு, திறமை, சாமர்த்தியம் என்பதோடு இன்னும் இரண்டு மூன்றை விட்டு விட்டாயே!''

''என்ன அவை?''

''பார்த்த உடனே எல்லாரையும் போட்டி போட்டுக் கொண்டு உனக்கு உதவ முன்வரச் செய்கிற போதை தரும் உன் அழகு, தலையில் ஐஸ் வைப்பது போன்ற உன் குழுமை யான பேச்சு, போதாக்குறைக்கு லஞ்சம், ஊழல், சூழ்ச்சி, காக்டெய்ல் பார்ட்டி — இத்தியாதி...''

சாரு ரொம்பவும் ரசித்துச் சிரித்தாள். ''ஆல் இன் தி கேம் டாக்டர்!'' என்றாள்.

* * *

**வே**ணுகோபால் எஸ்டேட் பங்களாவைச் சுற்றி யிருந்த தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அங்கு பூத்துக் குலுங்கிய நூற்றுக்கணக்கான ரோஜா மலர்களும் நூற்றுக்கணக்கான சாருலதாக்களாகக் காட்சி அளித்து அவனைக் கிறுகிறுக்கச் செய்தன! அந்தத் தவிப்பைத் தாங்க முடியாமல் ஒரே ஒரு மலரை மட்டும் பறித்துக் கரத்தில் ஏந்தி அழகு பார்த்தான்.

அந்த ஒரு மலரின் ரத்தச் சிவப்பு நிறம் செவ்வரி ஓடும் சாருலதாவின் ஆரோக்கியமான கண்களை அவனுக்கு நினைவூட்டின. இதழ்களின் மென்மை அவளது பட்டுக் கன்னங்களையும், அதில் படிந்திருந்த பனி ஈரமான அவளது அதரங்களையும், அதன் சுகந்தம் அவள் அசையும் போதெல்லாம் எழும் சானல் — 5 செண்ட்டின் நறுமணத்தையும், அதன் மையத்திலுள்ள மகரந்தத் துகள்கள் அவளது கலகலப்பான சுபாவத்தையும், அத்துகள்களின் மஞ்சள் நிறம் அவளது பொன்னுன மேனியையும் ஞாபகப்படுத்தின. நன்கு உரமிடப்பட்டு உதகையின் இதமான சூழலில் செழித்து மலர்ந்திருந்த ரோஜா அவளது பொங்கும் இளமையுடன் கூடிய வாளிப்பான உடற்கட்டின் உருவகமாகத் தோன்றியது. அதன் புதுமையோ மதுரமான எண்ணங்களை அவன் உள்ளத்தில் கிளர்ந்தெழச்செய்து திக்குமுக்காட வைத்தது.

நல்ல வேளையாக அதே சமயம் ஒரு முள் நறுக்கென்று குத்தவே வேணு ரோஜாவை மறு கரத்துக்கு மாற்றி விட்டு விரல்களை உதறினான். 'நட்பு என்ற எல்லையைத் தாண்டினல் தற்காப்பு நடவடிக்கை எடுக்க நேரிடும்' என்று சாரு சொன்னது அவனுக்கு நினைவு வந்தது. மெல்லச் சிரித்துக் கொண்டே 'கெஸ்ட் ஹவுஸ்' வாசலைப் பார்த்தான். 'சாரு இன்னும் வரவில்லையே !'

**சா**ருவும் வேணுவும் எஸ்டேட்டுக்கு வந்து மூன்று மணி நேரத்துக்கு மேலாகி விட்டது. குளித்து மாற்றுடை தரித்து வந்ததும், ''எங்கேயாவது வெளியே போய்ச் சுற்றி விட்டு வரலாம்'' என்றான் வேணு.

''கொஞ்சம் இருங்கள். மற்ற 'கெஸ்ட்'களும் வந்து விடட்டும். உபசாரமாக நாலு வார்த்தை பேசி விட்டுக் கிளம்புகிறேன்'' என்றாள் சாரு.

எஸ்டேட்டின் மையத்தில் முதலாளிக்கென ஒரு பங்களாவும் கெஸ்ட் ஹவுஸ் ஒன்றும் இருந்தன. இரண்டுமே தாராளமானவை. சற்று நேரம் வேலைக்காரர்களுக்கு உத்தரவிடுவதிலும் பங்களா, தோட்டம் ஆகியவற்றைச் சுற்றிப் பார்ப்பதிலும் செலவிட்டாள் சாரு. அப்புறம் புதிய சீட்டுக் கட்டை உடைத்து 'டிக்ளேர்' ஆடத் தொடங்கினார்கள். இரண்டாவது ஆட்டத்தின் போது கார்கள் பல உறுமிக் கொண்டே வரும் சத்தம் கேட்டது.

''தளபதியைத் தேடிப் பட்டாளம் வந்து விட்டது; நான் தோட்டத்தில் இருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான் வேணு.

ஆனல் அவன் போர்ட்டிகோவைத் தாண்டு முன்னர் விருந்தினர் பலர் படியேறி விட்டார்கள். சற்று நேரம் மரியாதைக்குத் தாமதிக்க வேண்டியதாயிற்று.

காரிலிருந்து இறங்கிய மணி, ''சாஆஆருஊஊஊ!'' என்று நீட்டி முழக்கிக் கூப்பிட்டு, ''லெட் அஸ் நாட் வேஸ்ட் எனி டைம்'' என்று அவசரப்பட்டான், பாட்டிலைத் திறக்க. டாக்டரைத் தவிர எல்லாரும் 'கொல்' லென்று சிரித்தார்கள், 'அதிகபட்சம் இன்னும் மூன்று மாதங்கள். பிறகு கல்லீரல் கோளாறு காரணமாக ஆஸ்பத்திரிக்குப் போகப் போகிறான் மணி' என்பது டாக்டர் வேணுவுக்குத் தெரியும். அதை இப்போது சொன்னல் மணி தன்னைக் கேலி செய்து சிரிப்பான் என்பதும் தெரியும். வாய் திறக்கவில்லை அவன். விருந்தினர் ஒவ்வொருவராய் வரவேற்பு அறையில் நுழைந்து தங்கள் தங்கள் சௌகரியங்களைக் கவனித்துக் கொண்டார்கள்.









ஜெர்மானியனை காஃப்மான் கேட்டான்: ''சாரு! சாம்பெய்ன் பாட்டிலைத் திறக்கத் தெரியுமா உனக்கு?''

ஜெர்மானிய நிறுவனம் ஒன்றின் ஒத்துழைப்புடன் காமிராக்கள் உற்பத்தி செய்யத் தொடங்கியிருந்தாள் சாரு.

அவன் கேள்விக்குப் பதிலாக, ''லைக் தி பெஸ்ட் பார்மெய்ட் யு ஹாவ் எவெர் ஸீன்!'' என்றாள் சாரு.

''ஆர் தி வொர்ஸ்ட்'' — பளிச்சென்று சொன்னான் அந்த ஜெர்மானியன் கண்களைச் சிமிட்டியபடியே.

அப்படி அவன் கூறியதன் உட்பொருள் அந்தக் கூட்டத்தில் இருந்த சிலருக்குத்தான் புரிந்தது. அவர்கள்—சாரு உட்பட — பெரிதாகச் சிரித்தார்கள். அதே சமயம் 'டப்'பென்ற ஒலியுடன் பாட்டில் திறந்து கொள்ள மது வழிந்தது. ''ஓஹோ ஹோ!'' என்ற உற்சாகமான வரவேற்பொலிகள் எழுந்தன. நகைச்சுவை புரிந்தும்கூடச் சிரிக்காமல் எழுந்து வெளியேறியவன் வேணு ஒருவனே. அவன் போனதை யாருமே கவனிக்கவில்லை.

மேனாட்டு மதுக் கடைகளில் மது விற்கும் பெண்களில் பலர் நடத்தை கெட்டவர்களாகவும் இருப்பார்கள் என்பது வேணுவுக்குத் தெரியும். 'உனக்குத் தெரிந்த 'பார் மெய்ட்'களில் சிறந்த ஒருத்தியைப் போல் அத்தனை லாகவமாக நான் சாம்பெய்ன் பாட்டிலைத் திறப்பேனாக்கும்' என்று சாரு கூறியதற்குப் பதிலாக 'மிக மோசமான ஒருத்தியைப் போல என்றும் சொல்லலாம் அல்லவா?' என்றான் காஃப்மான். நடத்தையில் மோசமான மது விற்கும் மங்கை, மது பாட்டிலைத் திறப்பதில் நன்னடத்தை உள்ளவளைவிட அதிக தேர்ச்சி பெற்றிருப்பாள் என்ற கருத்தில் கிண்டலாகப் பேச்சுவாக்கில் காஃப்மான் கூறினான். அயல்நாட்டிலிருந்து வந்த ஒருவனுடைய அயல்நாட்டு ஹாஸ்யம் அது. அவன் மனத்தில் தவறான எண்ணம் எதுவுமே கிடையாது. இது சாருவுக்கு மட்டுமல்ல, வேணுவுக்கும் தெரியும். ஆனால் சாரு சிரித்து மகிழ்ந்தது போல் வேணுவால் முடியவில்லை.

* * *

சாரு வருவாள் என்று தோட்டத்தில் கால் மணி நேரத்துக்கு மேல் காத்திருக்க இயலாதவனாய் நிலை கொள்ளாமல் பரபரத்தான் வேணு. உள்ளே நிலவிய சூழ்நிலை வேறு அவன் பொறுமையைச் சோதித்தது. பின்புறமாகப் போய்ச் சமையலறைப் பக்கம்

## ப்ரீத் PREETT ஸ்டீம்-இட் கொண்டு

# மெத்-மெத் தென்ற இட்டிலி-கள்

## தயாரித்துக் கொள்ளுங்கள்



**7 நிமிடங்களில்**



**உங்கள் சமையலறையை நவீனமாக்க உபயோகியுங்கள் ப்ரீத்**



PREETT

கொதிகலம்
கொதிக்க வைப்பதற்கும்
வேகவைப்பதற்கும்



ஸ்கில்லெட்
பொரிப்பதற்கும்,
புழுக்குவதற்கும்,
கொதிக்கவைப்பதற்கும்.





இந்தியாவில் விற்பனைக்கு

ஏற்றுமதிக்கு

**இலவசம் :** உங்கள் வசதிக்கென, அதிகப்படி ப்ளக் ஒன்றும், பின்டில் ஒன்றும், சமையற்கலைப் புத்தகம் ஒன்றும் இந்த அட்டைப் பெட்டிக்குள் பேக் செய்யப்பட்டுள்ளன.

தயாரிப்பாளர்கள் :
டிடி. (ப்ரைவேட்) லிமிடெட்
பெங்களூர்-16.

---

*தென்பிராந்திய வினியோகஸ்தர்கள் :*

M/s. முகமத் இப்ரஹிம் & கோ., பிரைவேட் லிமிடெட்
7/8, மவுண்ட் ரோடு, சென்னை - 2

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து
கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம்
அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில்
அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும்
செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை
மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும்
ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும்
ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள்.
தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள்
அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!

பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும்
திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து
நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா.
ஆம், இது ஒரு காட்பரிஸ் தயாரிப்பு!






**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**

**காட்பரிஸ் போர்ன்விடா.**

Bensons/0391/TAM

எட்டிப் பார்த்துப் பட்லரிடம் சொல்லி அனுப்பினான். அதற்குப் பலன் இருந்தது. ஐந்து நிமிஷங்களில் சாரு வந்தாள்.

''ஊற்றிக் கொடுத்தது போதும்; வா, போகலாம்!'' என்றான் வேணு.

''இன்னும் சரியாகப் பத்து நிமிஷங்களில் வந்து விடுகிறேன்.''

''அவர்களுக்குப் பாட்டில் தான் தேவை. உன்னைப் பற்றிய அக்கறை இல்லை.''

''பெரும்பாலும் நீங்கள் சொல்வது உண்மைதான். ஆனால் மேல்நாட்டினர் சிலரும் இருக்கிறார்கள். 'ஹோஸ்ட்'டைக் காணோம் என்றால் தப்பாக எடுத்துக் கொள்வார்கள். லெட் மி கெட் தி பார்ட்டி கோயிங்! அப்புறம் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டே வந்து விடுகிறேன்.''

சரியாகப் பதினோரு நிமிஷத்தில் சாரு வேணுவிடம் வந்து விட்டாள். ''எங்கே போகலாம்? பொடானிகல் கார்டன்?''

''சாரு, நமக்குள் ஒரு பந்தயம்!''

''என்ன?''

''யார் முதலில் மற்றவரைப் பற்றிக் குறை சொல்கிறார்களோ அவர்கள் தோற்றதாக அர்த்தம்!''

''ஐயய்யோ! அப்படியானால் நாம் என்னத்தைப் பேசுவது?''

''சாரு, நான் உன் பிஸினஸ்ஸை மறந்து விடுகிறேன். நீ என் நோயாளிகளை மறந்து விடு! நம் இருவருக்கும் பொதுவாகப் பிடித்தமான விஷயங்கள் ஏதேனும் இருக்கிறதா என்று ஆராயலாமே!''

''ஆல் ரைட்; ஆனால் எனக்கென்னவோ நம்பிக்கையில்லை'' என்று சொல்லிக்கொண்டே காரை 'ஸ்டார்ட்' செய்தாள் சாருலதா.

* * *

மாலை சுமார் நான்கு மணிக்கு அவர்கள் எஸ்டேட்டுக்குத் திரும்பினார்கள். பங்களா வாசலில் பசும்புல் தரையில் மேஜை நாற்காலிகளைப் போட்டு உட்கார்ந்து கொண்டிருந்தனர் ஐரோப்பியர் நால்வர். மேஜையின் மேல் 'ஆஷ்டிரே'யில் சில சிகரெட் துண்டுகளும் அருகே ஒரு கண்ணாடி ஜாடியில் ஐஸ் மிதக்கும் ஆரஞ்சு ஜூஸும் இருந்தன. சட்டையைக் கழற்றி விட்டுக் குளுமையான சூழ்நிலையில் இதமான சூரிய ஒளி தேகத்தைத் தழுவ அந்த ஆனந்

''மாடிப் படியில் கொலு வைத்து விட்டாள் என் மனைவி.''





''வருஷா வருஷம் கொலு வைப்பதும் எடுப்பதும் கஷ்டமாக இருக்கு என்று கொலு போட்டோவை இந்த ஒன்பது நாளும் மாட்டி பூஜை போட்டு விடுகிறேன் என் ஒய்ப்!''

''சிறைச்சாலையில் கைதிகள் ஆயுத பூஜையைச் சிறப்பாகக் கொண்டாடப் போகிறோம். என்னிடமிருந்து பறி முதல் செய்த கன்னக்கோல், கத்தி, கோடா, பழைய சாவிக் கொத்துக்களைத் திருப்பித்தர வேண்டுகிறேன்.''





''தலை உடைந்து போன பொம்மைக் கெல்லாம் தலையை நானே, பசை போட்டு ஒட்டிட்டேன்!''

— சுதர்ஸன்



**மீண்டும் தொல்லை-மறுபடியும் நேய்!**

குண்டாக இருப்பவர்கள் குதூகலமாக இருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனால் இவர்கள் குண்டாக ஆகிவிட்டதால் குதூகலமாக இருக்கிறார்களா, அல்லது குதூகலமாக இருப்பதால் குண்டாகி விடுகிறார்களா? இதுமட்டும் இன்னும் புரியவில்லை. 'வீக்கெண்ட்' — 'முத்து.'

தத்தை அநுபவித்தபடி நிதானமாகச் சீட்டாடிக் கொண்டிருந்தனர்.

சாரு காரிலிருந்து இறங்கி வருவதைப் பார்த்ததும், ''என்ஜாய்ட் யுவர் செல்வ்ஸ்?'' என்று கேட்ட அவர்களில் ஒருவர் எழுந்து வந்தார். ''சாரு! உன் வீட்டைக் கொஞ்சம் சுத்தப்படுத்த வேண்டியிருக்கும்; பட்லருக்குச் சொன்னேன். அவன் கொஞ்சம் பயப்படுகிறான்'' என்றார் ஆங்கிலத்தில்.

சாரு புரிந்து கொண்டவளாகத் தலையாட்டினாள். புன்னகையுடன் '' நான் கவனிக்கிறேன் '' என்று சொல்லிவிட்டு நகர்ந்தாள்.

உள்ளே குறட்டை ஒலி கிளம்ப ஒருவன் சோபாவில் சாய்ந்து கிடந்தான். இன்னொருவன் தரையிலேயே உருண்டு விழுந்திருந்தான். மற்றுமொரு விருந்தாளி மதுக் கிண்ணத்துடன் வாய் எங்கே என்று கைக்குத் தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்தான். அவர்களில் யாரோ ஒருவன் அறையின் நட்ட நடுவில் ரத்தினக் கம்பளத்தின் மீது வயிற்றைக் குமட்டியதால் அசிங்கப்படுத்தி யிருந்தான். வேறு பலர் தத்தம் அறைகளுக்கோ அல்லது வெளியேயோ சென்றிருக்க வேண்டும்.

அருவருப்பினால் வேணுவுக்கு நெஞ்சை முறுக்கியது. சாரு சற்றும் திகைப்போ தயக்கமோ இன்றிச் செயலாற்றினாள். மணி அடித்து, பட்லர் வந்ததும் நாலு ஆட்களை உதவிக்கு அழைத்து வரச் சொன்னாள். பாட்டில்களை மூடி அலமாரியில் அடுக்கிப் பூட்டினாள். கம்பளத்தைச் சுருட்டி எடுத்துப் போய்ச் சுத்தப்படுத்துமாறும் வேறு விரிப்பு கொண்டு வந்து போடுமாறும் உத்தரவிட்டாள்.

''டாக்டர்! வில் யு பிளீஸ் ஹெல்ப் மீ ?'' என்று கேட்டுக் கொண்டே கீழே விழுந்து கிடந்தவனின் கால்களைப் பற்றித் தூக்கினாள். கொஞ்சமும் பிடிக்காமலேயே வேணு அவன் தோள்களைப் பற்றிச் சுமந்தான். மதி இழந்த நிலையில் இருந்த மூவரையும் அவரவர் அறைக்குக் கொண்டு சேர்க்கப் பணியாட்களும் உதவினார்கள். சாருவுக்கு இருந்த மனோ திடத்தையும் உடல் வலிமையையும் வேணு நினைத்து வியந்து முடிப்பதற்கு முன்பே அவள், ஒன்றுமே நடக்காதது போல, '' வேணு ! குளித்து விட்டு வந்துவிடுகிறேன் ; சரியாக ஆறு மணிக்குச் சாப்பிட உட்கார்ந்து விடலாம். ஐரோப்பியர்களுக்கு 'டின்னர்' சீக்கிரம் முடித்துவிட வேண்டும்'' என்றாள். கூடவே, ''பட்லர்! ஐயாவுக்குக் குளிக்க ஹீட்டரில் வெந்நீர் போட்டிருக்கா பார்! டவல், சோப்பு எல்லாம் எடுத்துக் கொடு'' என்று உத்தரவு போட்டுக் கொண்டே தன் அறைக்குள் சென்று மறைந்து விட்டாள்.

வேணு தனக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த பகுதிக்குச் சென்று, சட்டையைக் கழற்றலாம் என்று பித்தானை அவிழ்க்கப் போனான். யதேச்சையாகச் சுவரில் தொங்கிய காலண்டரில் அவன் பார்வை பதிந்தது. மகாத்மா காந்தியின் படம்! பன்னிரண்டு மாதங்களுக்கு, கைதேர்ந்த ஓவியனால் தீட்டப்பட்ட அண்ணலின் ஆறுவித வண்ணப் படங்கள் அச்சடிக்கப்பட்டிருந்தன.

ஒரு சில விநாடிகள் அந்தக் காலண்டரைப் புரட்டிப் பார்த்த வேணு, சட்டென்று அதை ஆணியிலிருந்து நீக்கினான். சுருட்டித் தன் பெட்டியில் வைத்தான். வெளியே இறைந்து கிடந்த இரண்டொரு துணிமணிகளையும் பெட்டியில் எடுத்துப் போட்டு மூடினான்.

முன் வாசல் அறைக்கு அவன் வந்தபோது அங்கே சற்று முன் அவன் கண்ட அலங்கோலம் இல்லை. எல்லாம் கச்சிதமாக, சுத்தமாகக் காட்சி அளித்தன. மதுவின் நாற்றம்கூடக் காற்றில் இல்லை. வாசனைத் திரவியம் ஏதோ 'ஸ்பிரே' செய்யப்பட்டுச் செயற்கையான ஒரு நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது !

வேணு தனக்குள் சிரித்துக்கொண்டே வாசலில் இறங்கி நடந்தான்.

புல்வெளியில் சீட்டாடிக் கொண்டிருந்த ஐரோப்பியரில் ஒருவர், ''என்ன, மறுபடியும் வெளியே கிளம்பி விட்டீர்களா ?'' என்றார்.

''ஆமாம், இந்தத் தடவை சென்னைக்கே கிளம்பி விட்டேன்'' என்றான் வேணு, தன் கையிலிருந்த பெட்டியைத் தட்டிக் காட்டி. (தொடரும்)

## இதுதான் நெல்கோ தருன்—இன்றே தேர்ந்தெடுங்கள் —அதன் எழிலான தோற்றமே போதுமே, இப்போது நீங்கள் தேர்ந்து எடுத்திருப்பது 3 பாண்ட் ரேடியோக்களிலே முதன்மையானது

நெல்கோ தருன்-பார்த்தால் பசிதீரும். பரவசமூட்டும் புதிய அமைப்பு
பாங்கான டயல். பளபளக்கும் வெனீர் காபினட் தருனின் அழகுத்
தோற்றமே அதனை அள்ளி எடுத்திடத் தூண்டும்

கண்கள் காணாத கச்சிதங்கள் இன்னும் உண்டு.

ஒரு முறை மீட்டிப் பாருங்கள் ஓசை நயம் தெளிந்த நாதம்-ஓ-ஓ உன்னதம்!!

தருன் ரூ 315/- மட்டுமே. எக்ஸைஸ் உள்ளிட்டது.
பிரதேச வரிகள் தனி.



தருன் 230 வால்ட்
ஏஸி மற்றும் மெயின் கரண்டில் இயங்குகிறது
வெளிப்புற ஒலிபெருக்கிக்கென
ஸாக்கெட் வசதி, ஏரியல், ரெக்கார்ட் பிளேயர்,
பெரிய தெளிவான கவர்ச்சிமிக்க டியூனிங் ஸ்கேல்,
இன்னும் எத்தனையோ அனுகூலங்கள்
எங்களது டீலர்கள் அவற்றை உங்களுக்கு
விளக்கிச் சொல்வதில் மகிழ்ச்சி அடைவார்கள்.

இன்றே, இப்போதே அருகாமையிலிருக்கும்
நெல்கோ டீலரிடம் சென்று தருனை கண்டு,
கேட்டு ஆனந்தியுங்கள்.

நெல்கோ-ரேடியோ நுணுக்கத்தில் முன்னணி




நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கம். லிட்., பம்பாய்-4

ULKA-NE-6 TAM



# விநோத ஆசை!

தூங்கும்போது காணும் கனவிலும் நான் தூங்க வேண்டும். கனவுத் தூக்கத்தில் நான் விழித்து இருப்பது போல் கனவு காண வேண்டும்.!

வா.மு. அ. நூர்மைதீன்

சைக்கிளில் போகும் பொழுது முன் சக்கரம் கழன்று தனியே ஓடுவதைக் காண வேண்டும்.

-- பாபு

மாலை நேரத்தில் சர்க்கஸில் உள்ள மிருகங்களை யெல்லாம் தம் இஷ்டம் போல் செல்ல மவுண்ட் ரோடு சாலையில் விட்டுப் பார்க்க வேண்டும். என். வி. ஷண்முகம்

என். ஸி. ஸி.யில் இருந்த மூன்று வருடங்களிலும் ஒரு வருடமாவது எனக்கு அளவாக, சட்டையும், பாண்டும் கிடைக்காதா என்று ஆசைப் பட்டதுண்டு.

கண்களை மூடிக் கொண்டு ஊசியில் நூலைக் கோத்துக் கொடுக்க வேண்டும் அம்மாவிடம்.

-- ரா. விஸ்வநாத்

மேலே மின்சார விசிறி நிதானமாகச் சுழலும்போது கீழே இருந்து காலித் தீப்பெட்டி ஒன்றை அடையாளமிடப்பட்ட விசிறியின் இறகின் மீது அதில் அமரும்படியாக வீசி விளையாட வேண்டும்.

எஸ். சுப்பிரமணிய ராவ்

கல்லூரி மாணவிகள் அனைவரும் ஒரு நாள் பதினெட்டு முழ 'மடிசார்' உடுத்திக் கல்லூரிக்கு வர வேண்டும். எம். நிர்மல்ராஜ்

எங்கள் வீட்டில் இருக்கும் நைஜாம் காலக் காரை, இரண்டு மாடுகளின் உதவியால் இழுக்கச்செய்து அதில் ஆபீசுக்குப் போகவேண்டும்.

கே.வி. முரளி

கூடைக் கணக்கில் தக்காளிப் பழங்களைக் கொட்டி ரோடு ரோலரை அதன் மேல் ஏற்ற வேண்டும்.

-- கே. ராஜேந்திரன்

ஒரு சினிமாவைப் பஞ்சால் காதுகளை அடைத்துக் கொண்டு பார்க்கவேண்டும்.

ஆர். நாகராஜன்

"தும்மல் வரும் பொழுது தும்மலோடு சேர்ந்து குதிக்க விருப்பம்." -- வெ.இராதாகிருஷ்ணன்

சீரிய பாதையில் ஒரே வேகத்தில் அருகருகே செல்லும் இரு கார்களின் மேல், ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு காலை வைத்து நின்று கொண்டு பிரயாணம் செய்ய வேண்டும்"

வி. ராகவேந்திரன்

"மழை பெய்து கொண்டிருக்கும் பொழுது கண்களை அகல விரித்துக் கொண்டு பார்க்கப் பிரியம்.

-- பி. ஆர். சாந்தி

சினிமா புரொஜக்டரில் பிலிம் சுருளின் கடைசிப் படத்தை ஆரம்பமாக வைத்து இயக்கிப் படம் பார்க்க வேண்டும்.

ச. வெற்றி வண்ணன்

ஒரு கண்ணைத் திறந்து கொண்டும் மற்றொரு கண்ணை மூடிக் கொண்டும் தூங்க வேண்டும் !

-- என். லீலா

தமிழ் டைப்ரைட்டர் ஒன்றை ஆங்கில டைப்ரைட்டர் என்று நினைத்து, அதில் ஆங்கிலக் கடிதம் ஒன்றை அடித்துப் பார்த்தால்...?

ஆ. ரகுராமலிங்கம்

ஒரு மாதுளம் பழத்தை நறுக்கி, அதிலுள்ள முத்துக்களைச் சரியாக எண்ண வேண்டும்.

-- டி.க.ச. விஜயலக்ஷ்மி

ரயில் இன்ஜின்கள் இரண்டை எதிரும் புதிருமாக இணைத்து ஒரே சமயத்தில் ஓட்டச் செய்து பார்க்க வேண்டும்.

எல்.கே. மதிநிறைச்செல்வன்

இசைத் தட்டின் வெளிவட்டக் கோட்டிலிருந்து உள் வட்டத்துக்குச் செல்வதற்குப் பதில் ஊசி உள் வட்டக் கோட்டிலிருந்து வெளிவட்டத்துக்கு நகரும் படி செய்து ஒலிக்கும் இசையைக் கேட்க வேண்டும்.

-- எம். எஸ். ஜானகிராமன்

தமிழ் நாட்டுக் குழாய்களில் 24 மணி நேரமும் தண்ணீர் கொட்டுவதைப் பார்க்க வேண்டும்! வி. எஸ். வாசன்



அட்டைப் படக்கதை

“சீதா...பதே...! ராகவா....ஹே....பிரபோ....!”

ரங்கமூர்த்தி மெதுவாக வாய்க்குள் முணுமுணுத்தபடியே சுந்தரகாண்டப் புத்தகத்தில் படித்து முடித்த பக்கத்தில் அடையாளமிட்டு, மூடி, அதை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

நிமிர்ந்து எதிரே பூஜை மண்டபத்தைப் பார்த்தபோது அதில் நடுநாயகமாக வீற்றிருந்த ராம விக்கிரகம் அவரைப் பார்த்துப் புன்னகை பூத்து ஆசீர்வதிப்பது போலத் தோன்றவே, மெய் சிலிர்க்க ‘ராம..ராம...!’ என்று முணுமுணுத்தபடியே மண்டபத்திலிருந்த ஒவ்வொரு விக்கிரகத்தையும் வாஞ்சையுடன் மாறிமாறிப் பார்த்தார்.

சீதை விக்கிரகத்தின் மீது பார்வை பதிந்தபோது, அவர் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது.

அவர் வாய் ‘மைதிலி...மைதிலி’ என்று முணுமுணுத்தது.

விக்கிரகம் மறைந்து அந்த இடத்தில் அவர் மகள் மைதிலி தெய்வீகப் பொலிவுடன் தோற்றமளிக்கவே மன நிறைவுடன் கண்களை மூடித் திருப்தியாகப் பெருமூச்செறிந்தார்.

வெளியில் வந்து பார்த்தபோது அவர் தங்கை கௌரி ஏதோ முணுமுணுத்தபடி பரபரப்புடன் சமையலறையில் இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருந்தாள்.

தங்கை கௌரியைப் பற்றி எண்ணும்போதெல்லாம் அவர் மனத்தில் ஒரு பலவீனம் ஏற்படும். கலியாணமாகியும் எதையும் அனுபவிக்கக் கொடுத்து வைக்காதவளாகி அண்ணனே கதியென்று இருபது வருடங்களாக அவர் நிழலில் ஒதுங்கியிருக்கும் கௌரியின் வயது இன்னும் நாற்பதைத் தாண்டவில்லை.

கௌரியின் சுபாவம் அவருக்குப் பலவீனத்திலும் அதிருப்தியை அளித்தாலும் அவர் இந்நாள்வரை வாய் திறந்து அவள் மனம் நோகப் பேசியதில்லை.

மைதிலி பிறந்தபோது கௌரி வந்தாள். ஆறு வயதில் மைதிலி தாயை இழந்தபோது தவித்து நின்ற அண்ணனுக்கு ஆறுதல் கூறி அவர் சேயை அணைத்து வளர்த்தவள் அவளே.



# அன்புக்கரம்

எஸ். பத்மாவதி

இலையில் பாயசத்தைப் பரிமாறிய கௌரி இவ்வளவு நேரம் அடக்கி வைத்திருந்த ஆத்திரம் வெளிப்பட “இன்றைக்கு மைதிலிக்குப் பிறந்த நாள் வருகிறதென்று தெரிந்திருந்தும், நீங்கள் அவளைக் கிராமத்துக்கு அனுப்பியது எனக்குத் துளியும் பிடிக்கவில்லை அண்ணா!” என்று படபடப்புடன் கூறினாள்.

ரங்கமூர்த்தி மெதுவாகச் சிரித்துக் கொண்டே, “அதனால் என்ன கௌரி! நீதான் பாயசம், பட்சணம் செய்து விட்டாயே! அங்கும் தாயம்மாள் பெரிய விருந்து சமைத்திருப்பாள், மைதிலி பிறந்த நாளுக்காக!” என்று கூறவே, கௌரி கடுகடுப்புடன், “இருந்தாலும் வயசு வந்த பெண்ணை இப்படி அனுப்பக் கூடாது” என்றாள்.

வியப்புடன் அவளை நிமிர்ந்து பார்த்தார் ரங்கமூர்த்தி. “என்ன கௌரி! எல்லாம் தெரிந்திருந்தும் நீயே இப்படிப் பேசறே!

மைதிலி அயலார் வீட்டுக்கா போயிருக்கிறாள்? உன் அக்காள்... அதாவது சொந்த அத்தை வீட்டுக்குப் போயிருக்கிறாள். உன் அக்காள் சௌந்தரம் போய்ச் சேர்ந்து பத்து வருடங்களானாலும், அவள் புருஷன் ராமநாதனும், பிள்ளை இளிபனும் நம் உறவை விட்டு விடாமல் வந்து இருந்து பழகுகிறார்கள். பார்க்கப் போனால் உன் பெரியக்காள் செல்லமாவது ஒதுங்கி யிருக்கிறாள் என்று சொல்ல வேண்டும்.''

இப்படி அவர் கூறிக் கொண்டிருந்தபோது வாசற் கதவு தடதடவென்று தட்டப்பட்டது.

''யாரது?'' என்று குரல் கொடுத்துக் கொண்டே சென்று கதவைத் திறந்தாள் கௌரி. ''அடடா! அரவிந்தன்! ஓ! அக்காவும் கூட வந்திருக்காங்களே. அதிசயமாக இருக்கே! வா, அக்கா! வாப்பா அரவிந்த்... உள்ளே மாமா சாப்பிடுறார்'' என்று கௌரி சந்தோஷக் குரலில் கூவவும் ரங்கமூர்த்தி கையில் எடுத்த கவளத்தை வாயில் போடவும் மறந்து அதிசயத்துடன் திரும்பிப் பார்த்தார்.

அகல ஜரிகைப் புடவை பளபளக்க, கையிலும், காதிலும் கழுத்திலும் தேவைக்கு அதிகமான வைர நகைகள் ஒளிவீசப் பருத்த உடலைச் சுமந்து கொண்டு ஆடி அசைந்து கொண்டே சாப்பாட்டு அறைக்குள் செல்லம் நுழைந்தபோது, 'உம்.. இவ்வளவு நகைகள் பளபளத்து என்ன பயன்? முக்கியமாக அவள் முகத்தில் துலங்கி ஒளிவீச வேண்டிய குங்குமத் திலகம் அங்கு இல்லையே!' என்று எண்ணிப் பெருமூச்செறிந்தார் ரங்கமூர்த்தி. சட்டென்று தம் எண்ணத்தை மறைத்தவராக, ''வா... செல்லம்... வா... அரவிந்த்! அதிசயமாக இருக்கே!'' என்று கூறி முகம் மலர வரவேற்றார்.

''அதிசயம் என்னண்ணா! நீங்கதான் அவர் போன பிறகு வீட்டுப் பக்கமே வரதில்லே. நான் தங்கையாச்சே! அப்படி இருக்க முடியுமா? அரவிந்தன் பொறுப்பாக எல்லாவற்றையும் நிர்வாகம் செய்தாலும் அவ்வளவு பெரிய எஸ்டேட்டைக் - கட்டிக் காப்பது சுலபமாகவா இருக்கு! அவனைத் தனியாக விட்டு விட்டு அடிக்கடி வர முடியுமா? ஏதோ முடிஞ்சப்போ ஆசை பொறுக்காமல் உங்களைப் பார்க்க ஓடி வரேன்'' என்று குற்றம் சாட்டும் குரலில் கூறினாள் செல்லம்.

ரங்கமூர்த்தி பதிலேதும் கூறாமல், மனத்துள் சிரித்துக் கொண்டே, ''கௌரி! செல்லத்துக்கும் அரவிந்தனுக்கும் சாப்பிட இலை போடேன். பிறகு பேசலாம்'' என்றார்.

சாப்பாட்டு அறையின் வெளியில் நின்றிருந்த அரவிந்தன் ''மாமா! நாங்கள் காரில் வந்ததினால் சாப்பிட்டுவிட்டே புறப்பட்டோம். பூட்ஸ் காலோடு சாப்பாட்டு அறைக்குள் வரக்கூடாதென்று கெடுபிடி செய்வீர்களே என்று பயந்து இங்கேயே நிற்கிறேன். சீக்கிரம் சாப்பிட்டுவிட்டு நீங்கள் வெளியே வாங்க!'' என்றவன் சுற்று முற்றும் பார்த்தபடி, ''ஆமாம், எங்கே மைதிலியைக் காணோம்?'' என்று கேட்டான்.

செல்லமும் உடனே, ''ஆமாம், கௌரி! மைதிலி எங்கே? வந்ததிலிருந்து கண்ணில் தென்படவே இல்லையே!'' என்று வினவினாள்.

''மைதிலியா...? அவள் தன் அத்தை வீட்டுக்குச் சீராடப் போயிருக்கிறாள்'' என்று நொடிப்புடன் கூறிய கௌரி, ''இன்று மைதிலிக்குப் பிறந்த நாள் அக்கா... கொஞ்சம் பாயஸமாவது சாப்பிடுங்கள்'' என்று கூறிக் கொண்டு இரண்டு கிண்ணங்களில் பாயஸம் எடுத்து வந்து செல்லத்திடமும் அரவிந்தனிடமும் கொடுத்தாள்.

செல்லம் அதிசயத்துடன், ''அது யாருடி அத்தை? நீயும் நானும் இங்கிருக்கும்போது?'' என வியக்கவும், கௌரி குறுக்கிட்டு ''நம்ம இரண்டு பேருக்கும் இடையில் பிறந்து வளர்ந்து, வாழ்ந்து இப்பொழுது இல்லாமல் போய்விட்டாளே! அவள் வீட்டுக்குத்தான்'' என்று நீட்டி முழக்கினாள்.

பாயஸத்தை ருசித்துக் கொண்டிருந்த அரவிந்தன், ''சே... மைதிலி இல்லாமல் வீடே நன்றாக இல்லே, மாமா! இங்கிருந்து அந்தக் கிராமம் இருநூறு மைல்தானே... நான்கே மணி நேரத்தில் என் காரில் போய் விடலாம். நான் போய் அழைத்து வந்து விடுகிறேனே...ஏனம்மா! எப்படி என் யோசனை?'' என்று செல்லத்தைப் பார்த்துக் கேட்டான்.

செல்லமும் ''ஆமாம் அண்ணா! அதுதான் சரி. இரண்டு நாட்கள் தங்கிவிட்டுப் போக வந்திருக்கிறேன். அரவிந்தன் அப்பாவுக்கு நெருங்கிய சிநேகிதர் பிள்ளைக்குக் கல்யாணம். வருந்தி வருந்திக் கூப்பிட்டார்கள். இல்லாவிட்டால் நான் மலையை விட்டு இறங்கியிருக்கவே மாட்டேன். நான் அபூர்வமாக வந்தபோது மைதிலி இல்லேன்னா நன்னாயில்லே. அரவிந்தன் போய் அழைத்து வரட்டும்'' என்று கூறி முடித்ததும், கௌரியும் குதூகலத்துடன், ''ஆமாம், ரங்கண்ணா! அரவிந்தன் போய் மைதிலியை அழைத்து வரட்டும். எனக்கும் அவளில்லாமல் பொழுதே போகவில்லே'' என்றாள்.

ரங்கமூர்த்தி இடுக்கிட்டவராகச் சிறிது தயங்கிய குரலில், ''இடீரென்று அரவிந்தன் போய்க் கூப்பிட்டால் அனுப்புவார்களோ என்னமோ?'' என்று சொன்னார். செல்லம் சீற்றத்துடன், ''என்னண்ணா அப்படிச் சொல்லி விட்டீர்கள்? திலீபன் என்ன உறவோ அதே அத்தான் உறவுதானே அரவிந்தனும்? அவன் வந்து கூப்பிட்டபோது நீங்கள் அனுப்பவில்லையா? அதுபோல் அரவிந்தன் கூப்பிடும்போது அவர்கள் அனுப்ப முடியாதென்று சொல்லி விடுவார்களா?'' என்று கேட்டாள்.

ரங்கமூர்த்தி, சிறிது திடமான குரலில் ''இல்லே, செல்லம்! திலீபன் மட்டும் வந்து கூப்பிட்டிருந்தால் நான் கண்டிப்பாக மைதிலியை அனுப்பி யிருக்க மாட்டேன். தாயம்மாள் வந்து உடன் அழைத்துச் சென்றதால்தான் அனுப்பினேன்!'' என்றார்.

செல்லம் இதற்கு என்ன பதில் கூறுவதென்று யோசித்தபோது கௌரி குறுக்கிட்டு, ''அவ்வளவுதானே அண்ணா! நான் அரவிந்தன் கூடப் போய்க் கூட்டி வரேன், போதுமா? நான் கூப்பிட்டால் மைதிலிதான் வராமல் இருந்து விடுவாளா? அல்லது அவர்கள்தான் அனுப்பாமல் இருக்க முடியுமா?'' என்றாள்.

ரங்கமூர்த்தி அவளுக்கு என்ன பதில் கூறுவதென்று தெரியாமல் திகைத்தார்.



தோற்றம்: 16-1-1880 – மறைவு: 3-9-1969

தஞ்சை, கணபதி நகர், ஸ்ரீ C. M. சுப்பிரமணிய அய்யர் (ஓய்வுபெற்ற சப் மாஜிஸ்திரேட்) 3-9-69 புதன்கிழமை அன்று காலை பம்பாயில் சிவலோகப் பிராப்தி அடைந்தார்.

**ப**த்துப் பன்னிரண்டு வயது வரை அரவிந்தனும் திலீபனும் மாமா வீட்டில்தான் வளர்ந்து படித்தனர். அப்பொழுது அரவிந்தனின் தகப்பனார் துரைசாமி மிகவும் கஷ்ட நிலையில் இருந்தார். செல்லம்மாள் அடிக்கடி பிறந்தகத்துக்கு வந்துவிடுவாள். அரவிந்தனைத் தம்மிடமே வைத்துக்கொண்டு ரங்கமூர்த்தி படிக்க வைத்தார்.

திலீபனின் தகப்பனுருக்குக் கிராமத்தில் நன்செய் பூமி இருந்தது. கிராமத்தில் படிப்பு வசதி இல்லாததால் திலீபனும் மாமா வீட்டில் இருந்து படித்தான். ரங்கமூர்த்தி மிகுந்த தெய்வ பக்தி யுள்ளவர். ராமன் அவர் இஷ்ட தெய்வம். அவர் தினமும் மாலையில் திலீபனுக்கும், அரவிந்தனுக்கும் ராமாயணக் கதை சொல்லுவார். அவர்களைவிட ஐந்து வயது சிறியவளான மைதிலியும் அவர்களுடன் அமர்ந்து கதை கேட்பாள்.

பிறவியிலேயே முரடனான அரவிந்தனுக்கு ராமாயணத்திலேயே பிடித்த பாத்திரம் ராவணன்தான்!

மாமாவே பலதடவை வேடிக்கையாக அரவிந்தனை 'டேய், ராவணா!' என்றும், திலீபனை 'ராமச்சந்திர பிரபு' என்றும் அழைத்துக் கேலி செய்வது உண்டு.

இருவருக்குள்ளும் ஓர் ஒற்றுமை உண்டு. இருவரும் மைதிலியை மிகவும் நேசித்து, அவளைச் சந்தோஷப்படுத்துவதில் கருத்தாக இருப்பார்கள்.

திடீரென்று ஒரு நாள் அரவிந்தனின் தகப்பனார் பெரிய பணக்காரராகி விட்டார். வட நாட்டு ராஜா ஒருவருடைய மதிப்பிட முடியாத எஸ்டேட்டை நிர்வகித்து வந்த மானேஜரிடம் துரைசாமி கணக்கெழுதிப் பிழைத்து வந்தார்.

ராஜா மேல் நாடு போன சமயமும், மானேஜர் நோய்வாய்ப்பட்டிருந்த சமயமும் ஒன்று சேரவே, பொய்க் கணக்கெழுதிப் பல லட்சங்களை அமுக்கிக் கொண்ட துரைசாமி பழியை மானேஜர் தலையில் போட்டு அவரை ஜெயிலுக்கு அனுப்பி விட்டார்.

சட்டத்தின் பிடிக்குத் தப்பாமல் அவர் வெகு சாமர்த்தியமாகத் தப்பி விட்டாலும், அதர்மத்தின் பலன் கார் உருவத்தில் வந்து அவரை விபத்தில் சிக்க வைத்தபோது அந்தப் பணத்தைக் கொண்டு நீண்ட ஆயுளைச் சம்பாதிக்க அவரால் முடியவில்லை.

ஆனால் அவர் திடீர் மறைவு செல்லத்தையும் அரவிந்தனையும் சிறிதும் பாதிக்கவே இல்லை! செல்லம் தன் நெற்றிப் பொட்டைவிட வைர நகைகளையும் பட்டுப் புடவைகளையும் போற்றி மதித்தாள். அண்ணன் தங்கள் செல்வத்தை மதிக்கவில்லை என்ற கோபத்தில் அவர் வீட்டுக்கு வருவதையும் நிறுத்திக் கொண்டாள்.

மைதிலி அபூர்வ அழகி. அத்துடன் அரவிந்தனும் அவள் மீது வைத்த ஆசையை இன்னும் துறக்கவில்லை. இதைத் தவிர திலீபன் அடிக்கடி மாமா வீட்டுக்கு வந்து பழகி, உறவு கொண்டாடுவது அவன் மனத்தில் பொறாமைத் தீயை எழுப்பி விருந்தது.

மைதிலி போன்ற அழகான பெண் கிடைக்க மாட்டாள் என்பதுடன் தங்கள் குடும்பத்துப் பரம்பரைச் சொத்தான பொன் விளையும் பூமியும், அண்ணன் மகள் சீதனமாக வரும் என்ற ஆசையுமே செல்லத்தை அண்ணன் வீடு தேடி இப்பொழுது வர வழைத்திருந்தன.

**அ**ரவிந்தனின் கார் முருகூரை அடைந்த போது மாலை ஆறு மணியாகி விட்டது. கௌரிக்குக் குளிர் சாதனம் பொருத்தப்பட்ட அந்தப் பெரிய கார் சவாரி, அதன் வேகம், அரவிந்தனின் அட்டகாசமான பேச்சு எல்லாம் புதுமையாகவும் மனத்துக்குப் பிடித்ததாகவும் இருந்தன.

கார் திலீபன் வீட்டு முன் சென்று நின்ற போது அதன் மரக் கேட்டில் எழுதப்பட்டிருந்த ''ராம குமரம்'' என்ற வார்த்தைகளை வாய் விட்டுப் படித்த அரவிந்தன், ''பொருத்தமான பெயர்தான்!'' என்று ஏளனத்துடன் கூறினன். கௌரிக்காகக் காரின் பின் கதவைத் திறந்து விட்டவன், ''கௌரிச் சித்தி, நாம் சீக்கிரம் மைதிலியை அழைத்துக் கொண்டு கிளம்பி விட வேண்டும். ஞாபகம் இருக்கட்டும். என்னால் இந்தப் பட்டிக்காட்டில் வெகு நேரம் தங்க முடியாது'' என்று எச்சரிக்கை விடுத்தான்.

ரோஜாவும் மல்லிகையும் முல்லையும் பூத்துக் குலுங்கும் அழகான தோட்டத்தைக் கடந்து அவர்கள் உள்ளே நுழைந்தபோது வீட்டில் யாரும் இல்லை என்று வேலைக்காரன் கூறிய செய்தி அவர்களுக்கு ஏமாற்றத்தை அளித்தது.

முருகன் கோவிலில் மைதிலி அம்மா பிறந்த நாளுக்காகக் காலையில் அபிஷேகம் ஆராதனை நடந்ததென்றும், மாலை விசேஷமான சந்தனக்காப்பு அலங்காரத்துடன் அர்ச்சனைக்குத் திலீபன் ஐயா ஏற்பாடு செய்திருப்பதால் எல்லோரும் அங்கு போயிருப்பதாகவும் தெரிவித்தான் வேலையாள். அவர்களையும் கோவிலுக்கு அழைத்தபோது, ''நான் வரலை சித்தி. நீங்கள் வேண்டுமானால் போய்ப் பார்த்து விட்டு, சீக்கிரம் மைதிலியை அழைத்து வாருங்கள்'' என்று சிறிது எரிச்சலுடன் கூறினன் அரவிந்தன்.

ஏதோ முணுமுணுத்தபடியே கௌரி கோவிலை அடைந்த சமயம் தீபாராதனை நடந்து கொண்டிருந்தது.

''முருகா! என் அப்பனே!'' என்று கூறி வணங்கி எழுந்த கௌரியின் கண்களில் கூப்பிய கரங்களுடன் அருகருகில் நின்றிருந்த திலீபனும் மைதிலியும் காட்சியளித்தனர்.

''ஆஹா! என்ன அழகான ஜோடிப் பொருத்தம்! முருகனும், வள்ளியும் போலல்லவா இருக்கிறார்கள்!'' என்று தன்னையும் மறந்து ஒரு கணம் எண்ணினாள் கௌரி. ''சேச்சே! என்ன பைத்தியக்காரத்தனம்! மைதிலியாவது, இந்தத் திலீபனை மணப்பதாவது! அது ஒருகாலும் நடக்காது. செல்லக்காவின் பிள்ளை அரவிந்தனுக்குத் திலீபன் எந்த விதத்திலும் ஈடுமில்லை, இணையுமில்லை. ஏதோ விவசாயக் கல்லூரியில் முதலாவதாகத் தேறி விட்டான். வெகுக்கு உழைப்பதாகச் சொல்லி, வயலிலும் காட்டிலும் மேட்டிலும் அலைகிறான். விளைச்சலை இரட்டிப்பாக்கி விட்டதாகக் கூறிச் சர்க்கார்



## டாக்ஸியில் டெலிவிஷன்!

மேற்கு ஜெர்மனியிலுள்ள 'பான்' என்ற நகரத்தில் ஓடும் பல டாக்ஸிகளில் டெலிவிஷன் பொருத்தப்பட்டிருக்கிறது. விளையாட்டுப் பந்தயங்களில் ஈடுபாடு உள்ளவர்கள், நகரத்தில் ஆங்காங்கே நடக்கும் பந்தயங்களை அவ்வப்போது கண்டுகளிக்கட்டும் என்ற நோக்கத்தில்தான் டாக்ஸிகளில் டெலிவிஷன் வைக்கப்பட்டிருக்கிறது. டெலிவிஷன்கள் டிரைவருக்குப் பின்புறத்தில்தான் வைக்கப்பட்டிருக்கின்றன. காரணம், அவை டிரைவரின் கவனத்தை ஈர்த்து அதனால் ஏதாவது விபத்து நிகழ்ந்து விடக் கூடாது என்பதுதான்! 1972ல் ஜெர்மனியில் உள்ள மூனிச் என்ற நகரத்தில்தான் ஒலிம்பிக் பந்தயங்கள் நடக்கவிருக்கின்றன. அதற்குள் அங்குள்ள எல்லா டாக்ஸிகளிலும் டெலிவிஷன் பொருத்தப்பட்டு விடுமாம்!

ஆதாரம்: "பேட்ரியட்"
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

பரிசையும் வாங்கிக் கொண்டான். தன் நிலத்துடன் ரங்கண்ணாவின் நிலத்தையும் பார்த்துக் கொண்டு ஊருக்குத் தவறாமல் நெல்லும், அரிசியும், பருப்பும் அனுப்புகிறான். இதைத் தவிர வேறு என்ன தெரியும் அவனுக்கு? சுத்தப் பட்டிக்காடு!" என்று கௌரி எண்ண மிட்டுக் கொண்டிருக்கும்போதே, "கௌரி அத்தை! நீங்களா? எப்படி வந்தீர்கள், எப்போது வந்தீர்கள்?" என்று வினவிக்கொண்டே மைதிலி வந்தாள்.

அவளை வாஞ்சையுடன் தழுவிக்கொண்ட கௌரி, "ஏதுமா... புதுப் புடவையா?" என்று அவள் உடுத்தியிருந்த அழகிய கைத்தறிச் சேலையைத் தொட்டுப் பார்த்தாள்.

"ஆமாம், அத்தை! அத்தான் என் பிறந்த நாள் பரிசாக வாங்கிக் கொடுத்தார்!" என்று கூறிய மைதிலி அருகில் நெருங்கி விட்ட திலீபனைப் பார்த்துவிட்டு, நாணத்துடன் தலை குனிந்தாள்.

"ஆமாம், இதைவிட வேறு என்ன வாங்கித் தரமுடியும் அவனால்?" என்று தனக்குள் முணுமுணுத்த கௌரி தன்னைப் பார்த்து வியந்து நின்ற திலீபனிடமும் அவன் தந்தையிடமும் தான் வந்த காரணத்தைச் சொல்லி முடித்தாள்.

அவர்கள் அனைவரும் விரைந்து வீடு திரும்பியபோது அரவிந்தன் வழிமேல் விழி வைத்து மைதிலியின் வரவுக்காகக் காத்திருந்தான். மைதிலியின் அழகையும், கம்பீரத்தையும் பார்த்து அவன் திகைத்தது போலவே மைதிலியும் ஆஜானுபாகுவாக வளர்ந்திருந்த அரவிந்தனின் பகட்டான உடைகளையும் பளபளக்கும் பெரிய காரையும் பார்த்துப் பிரமித்து விட்டாள்.

அன்று இரவு திலீபன் வீட்டில் பெரிய விருந்து. திலீபனும் அவன் தந்தையும் அரவிந்தனைத் தங்கள் உபசரிப்பில் திக்கு முக்காட வைத்து விட்டனர். அரவிந்தன் எவ்வளவு மறுத்தும் திலீபன் குடும்பத்தினர் அவர்கள் இரவில் கார் பிரயாணம் செய்யக் கூடாதென்று தடுத்து நிறுத்தி விட்டனர்.

காலையில் அவர்கள் காரில் மைதிலியுடன் கிளம்பிச் சென்ற பிறகு தாயம்மாள் வருத்தத்துடன், "என்னப்பா, திலீபா! உன் கௌரி சித்தியும் அரவிந்தனும் செய்யும் ஆர்ப்பாட்டத்தைப் பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கிறது. இவ்வளவு நாட்கள் வராத செல்லம் வேறு வந்திருக்கிறாள்! மைதிலியைப் பெண் கேட்கத்தான் இருக்கும். என்னதான் பணம் கொட்டிக் கிடந்தாலும் அண்ணன் மகள் மைதிலியை விட அழகான குணசாலியான மருமகள் செல்லத்துக்குக் கிடைப்பாளா? அதுதான் ஓடி வந்திருக்கிறாள். கடைசியிலே என் ஆசை நிறைவேறாமல் போய்விடுமோ என்று பயமாக இருக்கிறது. உன் அம்மா இருந்திருந்தால் இதற்குள் மைதிலியை இந்த வீட்டு மருமகளாக்கி யிருப்பாள்!" என்றாள்.

'ரங்க மாமாவின் பராமரிப்பில் வளர்ந்த மைதிலி அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வர மாட்டாள்!' என்ற நம்பிக்கை திலீபனுக்கு.

ஆனால்...'மைதிலி, மைதிலி' என்று அவளையே சுற்றி வந்த அரவிந்தனின் அட்டகாசப் பேச்சுக்களைக் கேட்டு மைதிலி பிரமித்து நின்றபோது ரங்கமூர்த்திக்கே இனம் புரியாத கலக்கம் ஏற்பட்டது.

"ராமா! நீயே என் மகளைக் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக் கொள்வதைத் தவிர அவருக்கு வேறு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை.

நான்கு தினங்கள் தங்கிய பிறகு, செல்லமும், அரவிந்தனும் மைதிலியையும் தங்களுடன் அழைத்துச் சென்று பத்துத் தினங்கள் வைத்திருந்து அனுப்புவதாகக் கூறியபோது ரங்கமூர்த்தி அதிர்ந்துவிட்டார்.

மைதிலி செல்லத்துடன் போவது நல்லதல்ல என்று அவர் உள்ளுணர்வு கூறினாலும் அதைத் தடுக்கும் வகை அவருக்குத் தெரியவில்லை. கௌரியும் அவர்களுடன் கிளம்பியது அவருக்கு ஆறுதலாக இருந்தது.

திரும்பி ஊர் வந்து சேர்ந்ததிலிருந்து கௌரியின் வாய் ஓயவே யில்லை. பீரோ பீரோவாகச் செல்லம் தன் மருமகளுக்காக வாங்கி வைத்திருக்கும் ஜரிகைப் புடவைகளையும், நகைகளையும் பற்றி அண்ணனிடம் சலிப்படையாமல் வர்ணித்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் மறைத்தது...? அரவிந்தனின் தீய பழக்கங்களும் ஒழுக்கங்களும்!

சில தினங்களுக்குப் பிறகு செல்லத்திடமிருந்து சம்பிரதாயமாகப் பெண் கேட்டு ரங்கமூர்த்திக்குக் கடிதம் வந்திருந்தது. ஆச்சரியகரமாக மறுநாளே திலீபனின் தகப்பனாரும் அதே விஷயத்தைக் குறித்து ரங்கமூர்த்திக்குக் கடிதம் எழுதியிருந்தார்.

இதைத் தவிர மைதிலிக்கு அரவிந்தன் தனிப்பட ஒரு கடிதம் எழுதி யிருந்தான். அந்தக் கடிதத்தில் தன் ஆசையை வெளிப்படையாகத் தெரிவித்திருந்ததுடன் தன்னைத் தவிர வேறு யாரையும் மைதிலி மணக்க மாட்டாள் என்று நிச்சயித்தவன் போல் கல்யாணத்துக்குப் பிறகு தேனிலவுக்கு

# பூங்கா நகரம்—
# 60 ஆண்டுகள் முன்பே திட்டமிட்டு உருவானது

ஜாம்ஷெட்பூர்: வண்ணமலர்சோலைகள் மிகுந்தது. எஃகு நகரமென அழைக்கப்படும் ஜாம்ஷெட்பூர். அது உண்மை! இந்தியாவின் எழில் மிகு நகரங்களில் அதுவும் ஒன்று. மேலைநாட்டில் திட்டமிட்ட நகரநிர்மாணங்கள் சர்வசாதாரணம். ஆயினும், அதனிலும் அறுபது ஆண்டுகளுக்கு முன்பே ஜாம்ஷெட்பூர் திட்டமிட்டு உருவானதென்பது வியப்பேயாகும்.





சோனுரி— திருத்தியமைக்கப்பட்ட குடியிருப்பு. பல கட்டங்களில் திட்டமிட்டு, 20 குப்பங்களே, நல்ல வெளிச்சமுள்ள சாலைகள், போதுமான தண்ணீர் வசதிகளுடன் சிறந்த குடியிருப்புகளாக மாற்றியமைக்க டாடா ஸ்டீல் உதவி செய்துள்ளது.



டாடா பெரிய மருத்துவ மனை: வசதிகளுடன் 600 படுக்கைகள் பெற்றது இந்த மருத்துவமனை. தவிர 82 படுக்கைகளுடன் ஒரு காசநோய் மருத்துவ மனையும் அதில் ஒரு குழந்தைகள் வார்டும் அமைக்க டாடா ஸ்டீல் உதவியுள்ளது.



ஜுபிலி பூங்கா: "மனிதர்களுக்கும், அவர்தம் உணர்ச்சிகளுக்குமான அடிப்படைத்தேவையை, எஃகு மற்றும் இரும்பைக்காட்டிலும், மலர்களும் பூங்காக்களும், மரங்களும் பூர்த்தி செய்கின்றன என்று நான் கருதுகிறேன். அந்த சிறந்த சிந்தனையின் தோற்றமே இப்பூங்கா."

—ஜவாஹர்லால் நேரு

*எஃகும், மக்களுமே எங்கள் பலம்*

**டாடா ஸ்டீல்**

TN-44

அமெரிக்கா போக ஏற்பாடு செய்திருப்பதாகவும் குறிப்பிட்டிருப்பதைப் படித்ததும் மைதிலி மெய்சிலிர்த்தாள்.

அதே சமயம் திலீபன் தனக்குக் கடிதம் எழுதாததை எண்ணி மனத்தில் கோபப்பட்டாள். 'அரவிந்த அத்தானுக்கு என் மேலுள்ள ஆசை திலீபன் அத்தானுக்கு இல்லே' என்று மனம் குமைந்தாள்.

''என் ராஜாத்திக்கு அங்கு ராணி பதவி காத்திருக்கும்போது இந்தத் திலீபனோடு அவள் வயல் காட்டிலும், குச்சு வீட்டிலும் குடியிருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு எழுதியிருக்காரே அவன் அப்பா, அவர் புத்தி பிசகித்தான் போயிருக்க வேண்டும்!'' என்று கௌரி ஏளனமாகக் கூறியபோது மைதிலி அதைக் கேட்டுக் கொண்டு வாளாவிருந்ததைப் பார்த்த ரங்கமூர்த்தி திடுக்கிட்டார்.

''ஹே, ராமா!'' என்று மனத்துக்குள் வேண்டியவர், ''நீ என்னம்மா சொல்லறே?'' என்று தீனமான குரலில் கேட்டு மெதுவாக மைதிலியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

மைதிலி தன் கையில் வைத்திருந்த அரவிந்தனின் கடிதத்தை மெதுவாகத் தடவியபடியே நாணத்துடன் ஏதோ கூற வாய் திறந்த போது ரங்கமூர்த்தியின் உடல் குப்பென்று வியர்த்து விட்டது.

தாம் விரும்பாத செய்தியைக் கேட்கப் போவதாக அவர் உள் மனம் கூறியது. ஒன்றும் பேசாமல் தம் கைத்தடியை எடுத்துக் கொண்டு வேகமாக வீதியில் இறங்கி விட்டார்.

மைதிலி வெகு நேரம் அங்கேயே திகைத்து அமர்ந்திருந்தாள். அப்போது பூஜை மண்டபத்தின் ,எதிரே சுந்தர காண்டப் புத்தகம் பலகை மீது வைக்கப் பட்டிருந்தது. அவள் கண்களில் பட்டது. ''அப்பா மனக்கலக்கமேற்பட்டால் அதைத்தானே பிரித்துப் படிப்பார்!'' என்று எண்ணிய மைதிலி பயபக்தியுடன் மெதுவாக சுந்தர காண்டப் புத்தகத்தை எடுத்துப் பிரித்தாள்.

பிரித்த பக்கத்தில் இருபத்தோராவது ஸர்க்கம் என்று கொட்டை எழுத்துக்கள் காணப்பட்டன. மைதிலி அடியில் உள்ள வரிகளில் கண்களை ஓடவிட்டாள். பாதி படித்தவள், திடீரென்று திடுக்கிட்டு நிமிர்ந்த போது அவள் இதயம் மிக வேகமாக அடித்துக் கொண்டது.

சீதை ராவணனைப் பார்த்து அலட்சியமாக, ''உன் செல்வமும் ஐசுவரியமும் ஒரு பொருட்டா? அதைக் காட்டி என்னை மயக்கப் பார்க்கிறாயா?'' என்று கேட்கிறாள்.

இதற்கு மேல் மைதிலியால் படிக்க முடியவில்லை. அந்த வரிகள் தனக்காகவே அங்கு எழுதப்பட்டிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. மெதுவாக நிமிர்ந்து மண்டபத்தைப் பார்த்தாள். ராமரை ஒட்டி ஒயிலாக நின்றிருந்த சீதாதேவி மைதிலியைப் பார்த்து அருள் புன்னகை பூப்பதுபோல் தோன்றியது.

மைதிலிக்கு உடல் சில்லிட்டு விட்டது. படபடக்கும் தன் இதயத்தைக் கைகளால் அழுத்திக் கொண்டாள்.

'அமெரிக்கா போக ஆசைப்பட்டா நான் அரவிந்த அத்தானை மணக்க எண்ணினேன்? திலீப அத்தானின் அன்புக் கரம் பற்றி அமைதி சூழ்ந்த ஆற்றங் கரையில் உலாவுவதில் ஏற்படும் இன்பம் அமெரிக்காவில் கிடைக்குமோ? பண வசதியும் இட வசதியுமா ஒரு பெண்ணுக்கு நிறைவு? எந்த நிலையிலும் மாறாத அன்பு கொண்ட பொறுப்புள்ள கணவன்தானே ஒரு பெண்ணுக்கு நிறைவு? இந்த நிறைவு தரும் பண்பு யாரிடம் இருக்கிறது? அரவிந்தனிடமா, திலீபனிடமா?'

'தராசில் இரு பக்கமும் செல்வத்தை மட்டுமல்லவா வைத்து எடை போட்டு ஏமாந்து விட்டேன். முக்கியப் பொருளான குணத்தையும், உண்மை அன்பையும் தராசுத் தட்டில் போட்டுப் பார்த்திருந்தால் அல்லவா உண்மை வெளிப்பட்டிருக்கும்!

'திலீபனின் தெளிந்த பேச்சும் நேர்மையான நடத்தையும், எளிமையான வாழ்வும் கிராமத்தில் அவனுக்குள்ள மதிப்பும் மரியாதையும், அவன் அங்கிருந்த நாட்களில் எப்படி மனத்துக்கு நிறைவையும் அமைதியையும் அளித்தன!

'தாயம்மாளின் அன்புக் கரம் இட்ட உணவு அமுதமாக இருந்தது போல் பத்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள 'டைனிங் டேபிளில்' அமர்ந்து செல்லம்மாள் அதிகாரம் செய்ய நான்கு சமையல்காரர்கள் பரிமாறிச் சாப்பிட்டபோது இனிக்கவில்லையே, ஏன்?'

திடீரென்று தன்னைச் சுற்றிச் சூழ்ந்திருந்த இருள் விலகிப் பிரகாசமான ஒளி பரவுவதை மைதிலி உணர்ந்தாள்.

'திலீப அத்தானின் கண்ணியத்தைத் தவறாகப் புரிந்து கொண்டு, அரவிந்தன் போல் காதல் கடிதம் எழுதவில்லை என்று எண்ணினேனே, என்ன பேதைமை! பணத்தைத் துச்சமாக மதிக்கும் என் தந்தைக்கு ஏற்ற மகள்தானா நான்!' இப்படி எண்ணிய மைதிலியின் கண்களிலிருந்து கண்ணீர் முத்துக்கள் உருண்டு தரையில் தெறித்தன.

'நான் மட்டும் முதலில் கூற நினைத்ததை உடனே கூறியிருந்தால் தந்தை எப்படித் துடித்துப் போயிருப்பார்! ராமா! என்னைத் தெளிய வைத்துக் காப்பாற்றி விட்டாய்!' என்று முணுமுணுத்த மைதிலி தரையில் குனிந்து பக்தியுடன் வணங்கி எழுந்தாள்.

வேகமாகத் தன் அறைக்குச் சென்றவள் கையிலிருந்த அரவிந்தனின் கடிதத்தைச் சுக்கலாகக் கிழித்து ஜன்னல் வழியாக வீசினாள். பெட்டியைத் திறந்து மூடியபோது அவள் கையில் திலீபன் பரிசளித்த கைத்தறிச் சேலை இருந்தது.

மன ஆயாசத்துடன், 'ராமா, ராமா' என்று வாய்க்குள் கூறியபடியே மெதுவாக வீட்டினுள் நுழைந்து நாற்காலியில் அமர்ந்த ரங்கமூர்த்தி தம் முன் புது கைத்தறிச் சேலை அணிந்து அழகே உருவாக வந்து நின்ற மைதிலியைப் பார்த்துப் பிரமித்துவிட்டார்.

மைதிலி பதற்றமில்லாமல் தெளிவான குரலில், ''அப்பா! உங்கள் ராமன் நீங்கள் கூறியபடியே என் மனத்தைத் தெளிய வைத்து எது உண்மையான செல்வம் என்று எனக்குக் காட்டிவிட்டான். இந்த மைதிலி இருக்க வேண்டிய இடம் ராம குடீரம்தான், ராவணக்ருஹமல்ல!'' என்று அரவிந்தனை ராவணனோடு உருவகப்படுத்திய பொழுது, ரங்கமூர்த்தி பேச்சிழந்து நின்றார்.

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோ ஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிகோலஸ் (N) தயாரிப்பு

AGIT.TAN



# வேஷங்கள்

— ஒரு கருத்தரங்கு

**[மையக் கருத்தில், பாத்திரப் படைப்பில், சொல்லும் தன்மையில், நடையில், பேச்சில் ஒரு புதுமை தென்பட்டிருப்பதாகப் பெரும்பாலானவர்கள் அபிப்பிராயம் கொண்டிருக்கும் 'வேஷங்கள்' தொடர்நாவல் பற்றி மதுரை இலக்கிய வட்டம் நடத்திய கருத்தரங்கின் சுருக்கம். விவாதத்தைத் திரு டி. ஆர். நடராஜன் ஆரம்பித்து வைத்தார்.]**

**நடராஜன் :** இப்போது தமிழ்ப் பத்திரிகைகளில் ஒரு வேகம் — அதிகமாகத் தொடர்கதைகள் போட வேண்டும் என்று. பத்திரிகைகளின் ஜீவனே தொடர்கதைகளில்தான் என்ற நிலை இருக்கிறது. எனினும், இவற்றில் பல மனத்தில் நிற்பதேயில்லை. நின்றவற்றில் முதல் ஸ்தானம் வகிக்கக் கூடிய தரம் நிரம்பியது 'வேஷங்கள்' என்று கருதுகிறேன். இத்தொடர் நாவலில் படைப்புத் திறனும் அதன் விளைவான 'டென்ஷ'னும் (Tension) இருக்கிறது. ஆசிரியர் நமக்குச் சம காலத்தவராயும், நம் சிந்தனையுடன் இயைபவராயும் இருப்பதால் இந்தப் பாதிப்பு. நம்முடைய உணர்ச்சிகள், கனவுகள், எதிர்பார்ப்புகள், வேகங்கள் எல்லாம் இந்த நாவலில் பிரதிபலிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். பழமை, புதுமை இரண்டுக்கும் இடைப் பட்டு நின்று எந்தவிதப் பிடிப்புக்கும் ஆளாகாமல் எழுதியிருக்கிறார். இது ஆசிரியருக்கு மகத்தான வெற்றி.

**கோ. முருகன் :** நடராஜன் சொல்வது சரிதான். பழைய கொள்கைகளைத் திரட்டிப் பிழிந்து தருகிற நிலையைக் கடந்து, யதார்த்த ரீதியில் — செக்ஸ்தான் ரியலிஸம் என்பவர்களைக் கூப்பிட்டுப் படிக்கச் சொல்லுங்கள் இந்த நாவலை — படைப்புச் சிந்தனையுடன் ஆசிரியர் உருவாக்கியிருக்கிறார். சம்பவ இறுக்கம் வெகு அருமை.

**சங்கர நாராயணன் :** ரொம்ப சரி. இதைத் தவிர நடை, சம்பாஷணை ஆகியவற்றிலும் கூட வருணனைகள், சம்பந்தமில்லாத நிகழ்ச்சிகள் என்று வளர்த்தாமல் சொல் பொறுப் போடு எழுதியிருக்கிறார். ரமணிக்குத் தாழ்வு மனப்பான்மை என்றால் அவன் மனைவிக்குக் கணவனிடம் — ஆசிரியரே சொல்வதுபோல் சாக்கடையில் விழுந்தவனைக் காண்கிற மாதிரி அருவருப்பு காண்பிக்கும் உயர்வு மனப்பான்மை. இப்படியே பாத்திரப் படைப்பில் எல்லாரிடமும் ஒவ்வொரு 'காம்ப்ளெக்ஸ்' அமைந்திருக்கிறது. ஆசிரியர் ஏன் இப்படிச் செதுக்கியிருக்கிறார் ?

**திருவையாறு ராஜகோபாலன்:** இந்த மனப்பான்மைகள்தாமே வேஷங்களுக்குக் காரணம். அவரவர் சொந்தக் குற்றம் குறைகளை மறைக்கத்தானே வேஷங்கள்! அது சரி, ஆனால் ஆசிரியரின் நோக்கம் இந்த ஓர் அம்சத்தை வலியுறுத்துவதுதானா ? 'மனித சமுதாயம் வேஷங்களில் மறைகிறது' என்று ஒரே ஒரு விஷயத்தைச் சொல்லுகையில், ஆலன் போ அபிப்பிராயப்படி, சிறுகதை உருவம்தானே கிடைக்கிறது இந்த 'வேஷங்களு'க்கு ?

**நடராஜன் :** விஷயத்தை எடுத்து நுணுகிப் பார்ப்பதிலும், விரித்து நோக்குவதிலும், அலசுவதிலும்தான் இலக்கியம் புடம் போடப்படுகிறது. நீங்கள் சொல்லும் ஒரே நோக்கம் என்ற அம்சத்துக்கும் மேலாக ஆசிரியரின் உத்தி இங்கே பரிமளிக்கின்றது.

**கோ. மு :** ஆரம்ப முதல் அடுத்தாற்போல் ஆசிரியர் சொல்லப் போவது என்ன என்பதே தெரியாமல் இருக்கிறது. எதிர் பார்த்தலைகள் இல்லாமல் புதிதாகச் சொல்லி வியப்பில் ஆழ்த்துகிறார்.

**ச. நா :** ஆமாம். ஆனால் ஆரம்பத்தில் உண்டான உற்சாகம் இறுதியில் காணப்படவில்லையே !

**இ. ராஜு :** அதற்குக் காரணம் கதையை ஆசிரியர் சிறுகதை முடிவு மாதிரி 'சடே'ரென முடித்து விடுவதுதான். இன்னும் விரிவாக எழுதுவாரென்று எதிர்பார்த்திருந்தால் ஏமாற்றமடைய வேண்டியதுதான். நான் அடைந்தேன். முடிவு சிறப்பாக இல்லை. என்ன சொல்வதற்காக இவ்வளவு எழுதினார் என்று கடைசியில் தீர்மானமாக ஆசிரியர் சொல்லாமல் விட்டிருக்கிறார்.

**நட :** கதை என்று பொம்மை பண்ணச் சொல்கிறீர்களா ?

**ச. நாரா :** முடிவில் சரியாக ஆசிரியர் தாம் நினைப்பதைச் சொல்லவில்லை என்கிறேன். பண்பாடு பற்றிச் சீறும் சங்கரன் மூலமாகவோ, பெரிய மமதையைக் காட்டிய பச்சாத்தாபத்தை மறைவில் அநுபவிக்கும் ரமணி மூலமாகவோ ஆசிரியர் வாசகர்களுக்குத் தமது உத்தேசம், உபதேசம் என்ன என்பதைச் சொல்லியிருக்கலாம்.

**நட :** உபதேசம் வேண்டுமானால் பாதிரியாரிடமோ மடாதிபதியிடமோ போங்கள் !

**ராஜு :** பாத்திர அமைப்பு சரியாக அமைந்திருக்கிறது. கதாநாயகன் சங்கரன் என்றாலும், அவன் வீர வழிபாடுகளாலோ, ஆராதனைகளாலோ உருவாக்கப்படவில்லை. பலமும்,

பலவீனமும் சேர்ந்த வாஸ்தவமான மனிதன். இந்தியன், கோபு, சுந்தரம் இவர்களும் நன்கு உருவாக்கப்பட்டிருக்கிறார்கள்.

**ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி :** பாத்திரங்களில் உயிர்த் துடிப்பும் அர்த்தபுஷ்டியும் உள்ளவளாக எனக்கு ரமணியின் மனைவி படுகிறாள். அவள் பெயரை இறுதி வரையிலும் சொல்லாதது ஒரு புதுமை. ஆசிரியருக்குத் தூய இலக்கியப் பிரக்ஞையும், கலையார்வமும் இருப்பதை இந்தப் பாத்திரம் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. ஆரம்பத்திலேயே சங்கரனிடம், ரமணி மனைவி எச்சரிக்கிறாள், தன்னிடம் அநுதாபம் காட்டக் கூடாதென்று. அவளுடைய எச்சரிக்கை மிகுந்த சுபாவம் நமக்குத் தெரிகிறது. இந்த இடத்திலிருந்து ஓர் அறிவாலும் மனத்தாலும் முதிர்ச்சி அடைந்த இந்தியப் பெண்மணியின் குணச் சித்திரம் உயிர் பெற ஆரம்பிக்கிறது. கதை முழுதும் யதார்த்தம் நிரம்பி வழிகிறதை இந்தப் பாத்திரம் தூக்கிக் காண்பிக்கின்றது. ராஜாஜி அவர்கள் ஒரு முறை எழுதினார்: 'இன்றைய இந்தியாவில் கதையின் மையக் கருத்துப் பொருளில் ஆரோக்கியமில்லாததற்கு நியாயமான காரணங்கள் இருக்கலாம். ஆனால் இதனால் இலக்கியம் வறட்சியடைந்து சூம்பிப் போய்விடுகின்றது' என்று. இந்த நிலையில் நுணுக்கமான பிரச்னையை மையமாகக் கொண்டு ஆரோக்கியமான சிந்தனைக்கு வழி வகுத்திருக்கிறார் இந்திரா பார்த்தசாரதி. சங்கரனை ரமணியின் மனைவி அறைகிற இடத்தில் ஆசிரியர் தமது எழுத்துக்கு அளித்திருக்கும் பெருமையை உணர முடிகின்றது — பண்பாடு பற்றி உணர்ந்து, சரியாக நிதானித்து, எல்லை மீறாமல் எழுதுகிறார். இந்தக் கவனம் கதையின் நாயகியாக விளங்கும் ரமணியின் மனைவி என்கிற பாத்திரத்தில் அழுத்தமாக விழுந்திருக்கின்றது.

**கோ. மூ :** மொத்தத்தில் இந்த நாவல் அருமையானதுதானே ?

**நட :** யார் இல்லை என்றார்கள்? ஆனால் என் முதல் பாராட்டு இ. பா.வுக்கு அல்ல. கல்கிக்குத்தான். இன்றைய சமூகத்தில் காணப்படும் பொய்யான வாழ்க்கைகளைச் சித்திரிக்கும் நாவலை எழுதுவதும் அதைப் பிரகரிப்பதும் கத்தி முனையில் நடக்கிற பணி. சூடான செங்கல்லைத் தொட்டுவிட்ட உணர்வுடன் விசுக்கென்று கையை உதறி இதை நிராகரிக்காமல் பிரகரித்தார்களே ! கல்கி பிரபல பத்திரிகையாக மட்டுமல்லாமல் — ஒரு மகத்தான இலக்கிய ஆசிரியனால் நிறுவப்பட்ட பெருமிதத்துடன் — இலக்கிய பூர்வமான சாதனைகளையும் செய்து வருகின்றது என்பதை 'வேஷங்கள்' என்ற சோதனை இலக்கியப் பிரகரம் நிரூபிக்கிறது. இலக்கியத் துறையில் புதுமைகளை — நியாயமான மாறுதல்களை — அங்கீகரிக்கிற கல்கியின் மனோபாவம் தமிழ் வாசகர்களின் பாராட்டுதல்களுக்கு உரித்தானது என்பதில் சந்தேகமில்லை.

—ஸ்வப்ன கங்கை

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## மறந்த பாடல் – மறவா மகிழ்ச்சி

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு நாள் காஞ்சிபுரம் ஒலிமுகம்மது பேட்டையிலே ஒரு மகாநாடு —

மாநாட்டின் முதல் நாள் இரவு அங்கு அமைக்கப்பட்டிருந்த கலையரங்கில் 'சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்' என்ற ஒரு நாடகம் நடைபெற இருந்தது. இந்த நாடகத்தை எழுதியவர் காலஞ்சென்ற அறிஞர் சி. என். அண்ணாதுரை. இயற்றியவரே இதில் நடிக்கவும் செய்தார். இன்று அரசியல் துறையிலும் நடிப்புத் துறையிலும் ரொம்பப் பிரபலமாய் உள்ள பலரும் அதில் நடித்தார்கள். மாநாட்டின் முந்தின நாள்தான்



நான் முதன் முதலாக அறிஞர் அண்ணாவுக்கு அறிமுகப்படுத்தப்பட்டேன். "நாடகத்தில் நடிக்கிறாயா ?" என்று கேட்டார் அண்ணா. நான் தலையாட்டினேன்.

உடனே எனக்கு வசனம் கொடுக்கப்பட்டது. பயிற்சியும் அளிக்கப்பட்டது. பாடுவேன் என்பதை அறிந்திருந்த அண்ணா எனக்கொரு பாட்டும் கொடுத்தார். நான் மேடையில் தோன்ற வேண்டிய கட்டம் வந்தது. என்னையறியாது உடலில் ஏதோ ஓர் இனம் புரியாத நடுக்கம்.

சந்திரமோகன் எனக்கு வாள் பயிற்சி அளிக்கின்ற கட்டம். வாள் பயிற்சி நடந்து கொண்டிருக்கும் போது சந்திரமோகன், "தம்பி நீ நன்றாகப் பாடுவாயே -- தமிழ்த் தாயைப் பற்றி ஒரு பாட்டுப் பாடு" என்று கேட்டு விடுகின்ற ஒரு காட்சி.

தமிழ் நாடுதான் மேலான நாடு என்று தொடங்கும் அந்தப் பாடலைப் பாட முயன்றேன். முதலடி பாடினேன். அடுத்த அடி வரவில்லை. எவ்வளவோ முயன்றேன். முடிவு தோல்வியே. ஆர்மோனியம் வாசிப்பவர் அடியெடுத்துக் கொடுக்கிறார். ஆனால் எனக்கு அந்த அடி நினைவுக்கு வரவில்லை. அழுகையே வந்து விடும் போல் இருந்தது.

இப்படியே சில விநாடிகள் பறந்தன. அந்த நேரத்தில் மேடையில் ஒரு முதியவர் தோன்றினார். "என்னப்பா கத்திச் சண்டை பழகுகிறீர்களா ?" என்று கேட்டார். தொடர்ந்து, "ஏன் தம்பி, திணறிக் கொண்டு நிற்கின்றாய் ? பாட்டு வரவில்லையா?" என்று என்னைப் பார்த்துக் கேட்ட அம்முதியவர் உடனே சந்திர மோகனைப் பார்த்து, "வாள் பயிற்சியிலே ஈடுபட்டிருக்கும் போது பாட்டிலே மனம் எப்படிச் செல்லும் ? முதலில் வாட் பயிற்சி-- பின்னர் பாட்டு -- அதுதான் நல்லது" என்று சொல்லிக் கொண்டே மேடையை விட்டுப் போய் விட்டார். கூட்டத்திலே ஒரே ஆரவாரம்- கை தட்டல்.

அப்புறம்தான் தெரிந்தது, முதியவராக மேடையில் தோன்றி என்னைத் தடுத்தாட்கொண்டவர் வேறு யாருமில்லை, அறிஞர் அண்ணா அவர்கள் தான் என்பது.

- காஞ்சி அமிழ்தன்

# பஜாஜ் எலெக்டிரிகல்ஸ் லிமிடெட்




# தினமணி கதிர்



## ஆகிய நிறுவனங்கள்
## இணைந்து நடத்தும்

# சமையற் குறிப்புப் போட்டி

அகில இந்திய சமையற் குறிப்புப் போட்டி ஒன்றை துவக்கியுள்ளதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். முழு விவரங்களுக்கு **தினமணி கதிரை** படிக்கவும்.

# மொத்தப் பரிசுத் தொகை ரூ. 6400



**பரிசுகள் :-**

**3 முதற் பரிசுகள், பஜாஜ் மின் அடுப்பு**



**6 இரண்டாம் பரிசுகள், பஜாஜ் மிக்ஸர்**



**42 ஆறுதல் பரிசுகள், பஜாஜ் மின் சாதனங்கள்**

குறிப்புகள் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி: 31-10-69
போட்டியில் பங்குபெறும் ஒவ்வொருவருக்கும்
விசேஷத் தள்ளுபடி கூப்பன் அனுப்பப்படும்.

**பஜாஜ் எலெக்டிரிகல்ஸ் லிமிடெட்**
45-47, வீர்நரிமன் ரோடு, பம்பாய்-1
இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு

heros' BE-44 TAM

**ம**ணி பன்னிரண்டு.

கோர்ட் ஹாலில் என் விழாதபடி கூட்டம்.

வக்கீல் வாஞ்சிநாதன் வாதத்தைத் தொடங்கினார்.

''நடப்பது இருபதாம் நூற்றாண்டு — கல் ஆனாலும் கணவன், புல் ஆனாலும் புருஷன் — காதுகள் புளித்துப் போய்விட்டன கேட்டுக் கேட்டு. 'இன்பந் தேன் வந்து பாயுது காதினிலே' என்று பாடிய பாரதி ஆணும் பெண்ணும் சமம், சரிநிகர் என்று தராசில் நிறுத்துக் காட்டிய காலம் இது.

கணவன் கணவனாய் இருந்த காலம் அது.

கணவனிடமிருந்து கண்ணியம் விலகி நிற்கும் காலம் இது.

மேடை ஏறி அடிமையை ஒழிக்கச் சவால் விடும் அரசியல்வாதிகள் கூட வீட்டில் மனைவியை அடிமையாய் நடத்துகிறான்.

மனைவி கணவனின் அடிமை அல்ல.

என் கட்சிக்காரியை அவள் கணவன் அடிமைபோல் கொடுமை செய்ததைப் பற்றிக் கட்சிக்காரியையும் இன்னும் மூன்று சாட்சிகளையும் விசாரித்துக் கோர்ட்டாருக்கு விளக்கியிருக்கிறேன்.

என் கட்சிக்காரியை மறுபடியும் மனைவியாக ஏற்கத் தயாராய் இருப்பதாய்ப் பிரதிவாதி சொல்வது இந்த ஜீவனாம்ச வழக்கை முறியடிப்பதற்குத்தான்.

மறுபடியும் அவர் போய்ப் பிரதிவாதியுடன் குடித்தனம் நடத்த அனுமதித்தால் நாமே அவளுடைய தற்கொலைக்கு உடந்தையாய் இருந்தவர்கள் ஆவோம்.

ஆகையால் என் கட்சிக்காரி கணவருடன் போய்க் குடும்பம் நடத்தத் தேவையில்லை.

பிரதிவாதி மாதம் இருநூறு ரூபாய் ஜீவனாம்சம் கொடுக்கும்படியும் உடைக்காக வருடத்துக்கு நூறு ரூபாய் தரும்படியும் தீர்ப்புத் தரும்படி கோர்ட்டாரை வேண்டிக் கொள்கிறேன்.




கணவன் மனைவியைக் கொடுமைப்படுத்தினால் அதற்குப் பரிகாரம் ஜீவனாம்சம்தான். வேறு பரிகாரமே இல்லை.''

வாஞ்சிநாதன் முடித்துவிட்டார். பிரதிவாதி வக்கீல் பேசி முடித்தார்.

''தீர்ப்பு இடைவேளைக்குப் பிறகு'' என்று சொல்லிவிட்டு நீதிபதி எழுந்து தம் அறைக்குப் போனார்.

''உங்கள் வாதம் பிரமாதம்.''

''வெற்றி உங்கள் பக்கம் தான்.''

''இனிமேல் ஜீவனாம்ச வழக்குகள் எல்லாம் உங்களிடம் தான் வரும்.''

எல்லோரும் அவரைப் பாராட்டினார்கள்.

**பி**ற்பகல் மணி மூன்று.

நீதிபதி மறுபடியும் கோர்ட்டுக்கு வந்தார்.

தீர்ப்பைப் படித்தார்.

''மனைவி என்பவள் கணவனின் அடிமை அல்ல. கணவன் என்ன கொடுமை செய்தாலும் மனைவி வாயைத் திறக்கக் கூடாது என்றெல்லாம் சொல்வது அபத்தம் என வாதம் செய்தார் வாஞ்சிநாதன். அதை நான் அப்படியே ஒப்புக் கொள்ளுகிறேன். இந்த வழக்கில் வாதியாகிய மனைவிக்குப் பிரதிவாதியாகிய கணவன் மாதம் இருநூறு ரூபாய் ஜீவனாம்சமும் உடைக்காக வருடத்துக்கு நூறு ரூபாயும் கொடுக்கும்படி தீர்ப்புக் கூறுகிறேன்.''

**வா**ஞ்சிநாதனுக்கு எல்லாரும் வாழ்த்துக் கூறினார்கள்.

வீட்டுக்கு வந்தார் வாஞ்சிநாதன். அப்போது மணி நான்கு.

வீட்டுக்குள் நுழைந்தார்.

கூடத்தில் அவர் வந்து ஊஞ்சலில் உட்காரவும் ''அப்பா!'' என்று கூவியபடி அவர் பெண் அகிலா வாசற்புறம் இருந்து வந்து சேர்ந்தாள்,

''யார் அகிலாவா?''

''ஆமாம் அப்பா.''

''எப்போது வந்தாய்? மாப்பிள்ளை வரவில்லையா?''

''இல்லையப்பா. நான் மட்டும்தான் மூன்று மணிக்கு வந்தேன்.''

''ஏன் மாப்பிள்ளை வரவில்லை? லீவு கிடைக்கவில்லையா? நீ வருவதாய் ஏன் எழுதவேயில்லை? எழுதியிருந்தால் நம்ம பஞ்சாமியை ரயிலடிக்கு அனுப்பி வைத்திருப்பேனே.''

அகிலா அழத் தொடங்கினாள்.

''ஏன் அகிலா, ஏன் அழுகிறாய்?''

''அப்பா என் கணவர் என்னை மிகவும் கொடுமைப்படுத்துகிறார். என்னை அவருக்குப் பிடிக்கவில்லையாம். என்னை அடிமை போல் நடத்துகிறார். வீட்டு வேலை செய்யத்தான் என்னை மணம் செய்து கொண்டாராம். அவருடைய மூத்தாள் குழந்தைகள் இரண்டு பேரையும் வளர்ப்பதற்காகத்தான் என்னை இரண்டாந்தாரமாய்ச் செய்து கொண்டாராம். நானும் கல்யாணமாகி இந்த ஐந்து வருடங்களாய் எவ்வளவோ பொறுத்திருந்து விட்டேன். இனி பொறுக்க முடியாது.''

''அதனால் நீ புறப்பட்டு வந்து விட்டாயாக்கும்?''

''ஆமாம். எனக்கு இனி அங்கு இருக்கப் பிரியமில்லை. நான் அங்கு போக மாட்டேன். என்னைப் படிக்க வைத்துவிடு. நான் டிரெயினிங் பாஸ் செய்து வாத்தியாரம்மாவாகிவிடுகிறேன். நல்லவேளை. குழந்தை கூட இல்லை. ச

''அவராக வந்து என்னைக் கெஞ்சிக் கூப்பிட்டால் கூட நான் போகப் போவதில்லை.''

''அப்புறம்?''

''அவரைக் கோர்ட்டுக்கு இழுத்து அடிக்க வேண்டும். நான் புறப்படும்போது சவால் விட்டு விட்டு வந்திருக்கிறேன். 'எங்கப்பா பெரிய வக்கீல். உங்களைக் கோர்ட்டுக்கு இழுத்து நியாயம் கிடைக்கச் செய்கிறேன். அப்பொழுதுதான் தெரியும் இந்த அகிலா யார் என்பதை' என்று.''

வாஞ்சிநாதன் ''அகிலா!'' என்று உரத்துக் கூவினார்.

தன் நிலையை எடுத்துச் சொன்னதும், அப்பா அழுவார் என்று எதிர்பார்த்த அகிலாவுக்கு அவர் தன்னை அப்படிக் கூப்பிட்டதைக் கண்டதும் பயம் உண்டாகியது.

''உன்னை உன் கணவருக்கு மணம் செய்து கொடுத்தது நீ அவருடன் வாழ வேண்டும் என்பதற்காகத்தானே தவிர என்னுடன் இருக்க அல்ல. என்னுடன் நீ வந்து இருக்க வேண்டுமானால் பிரசவத்துக்கு வா. நம் வீட்டில் நடக்கும் சுப காரியங்களுக்குக் கணவனுடன் வா. அதைத் தவிர நீ வேறு எதற்காகவும் என் வீடு வரக் கூடாது. கணவன் இல்லாமல், அவர் உத்தரவு இல்லாமல்.

''கணவன் கொடுமைப்படுத்தியதைப் பெரிதுபடுத்திப் பிறர் காதில் படும்படி செய்யாதே.

''நம் முன்னோர்கள் 'கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்' என்று வெட்டிப் பேச்சாய்ச் சொல்லவில்லை.

''கல் ஆனாலும் கணவன்—யுகம் ஏற்பட்ட போது ஏற்பட்டது. யுகம் அழியும்போது தான் அது அழிய முடியும்.

''ஆணும் பெண்ணும் சமம்—மேடைக்குத்தான் உதவும். நடைமுறைக்கு உதவாது.

''எப்போது தொட்டுத் தாலி கட்டியாகி விட்டதோ அது முதல் பெண்ணுக்குக் கணவனின் காலடிதான் சொர்க்கம். — அதைச் சொர்க்கமாக்குவதும் நரகமாக்குவதும் பெண்ணின் மனத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

''நான் பழமை விரும்பி.

''கணவனுடன் எப்போது வந்தாலும் என் வீட்டுக் கதவுகள் திறந்தபடி இருக்கும்.

''நீ மட்டும் வந்தால் அது திறக்காது.

''நீ இப்போதே திரும்பிப் போ. உன் கணவன் காலடியில் விழு. அவன் உன்னை ஏற்றுக் கொள்வான். அதன் பின் அவனுடன் வா.''

''வெல்டன் மாமா!'' — குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தார் வாஞ்சிநாதன்.

மாப்பிள்ளை பூமிநாதன் நின்றுகொண்டிருந்தார்.

வாஞ்சிநாதன் திடுக்கிட்டுப் போனார்.

''நீங்கள் எப்போது வந்தீர்கள் மாப்பிள்ளை!''

''அகிலாவிடம் நீங்கள் சொல்லிக் கொண்டிருந்தபோதே வந்து விட்டேன். ரேழியில் நின்று கேட்டுக் கொண்டிருந்தேன்.''




''நான் சொன்னது வாஸ்தவம்தானே மாப்பிள்ளை?''

''வாஸ்தவம்தான். ஆனால் இதே வாதத்தை எதிர் வாதமாக்கித்தானே ஒரு மணிக்கு முன்பு ஒரு வழக்கில் தீர்ப்புப் பெற்றீர்கள்!''

''உங்களுக்கு அது எப்படித் தெரியும் மாப்பிள்ளை?''

''இன்று பன்னிரண்டு மணிக்கு நானும், அகிலாவும் கோர்ட்டுக்கு வந்தோம், உங்களைப் பார்க்க. கோர்ட் ஹாலில் ஏகக் கூட்டம். உங்கள் வாதத்தையும் கோர்ட்டார் தீர்ப்புக் கூறியதையும் கேட்டோம். உங்களுக்கு நாங்கள் வந்தது தெரியாது.

''உடனே நானும் அகிலாவும் உங்களைப் பரீட்சை செய்ய இப்படி ஒரு நாடகம் ஆடி னோம். அவளை உள்ளே அனுப்பி விட்டு நான் ரேழியில் நின்றேன்.

''அவள் சொல்வதைக் கேட்டு உடனே நீங்கள் வழக்குப் போடக் குதிப்பீர்கள் என்று நினைத்தேன். ஒன்று கேட்கட்டுமா மாமா...''

''கேளுங்கள் மாப்பிள்ளை.''

''கட்சிக்காரியைக் கொடுமைப்படுத்திய தற்காக வாதம் செய்து வழக்கில் வெற்றி பெற்ற தாங்கள் உங்கள் மகள் அதே நிலை யில் இருப்பதாய்ச் சொன்னபோது மட்டும் ஏன் கோர்ட்டுக்குப் போகாமல் கணவன் வீட்டுக்குப் போகும்படி சொன்னீர்கள்?''

''கட்சிக்காரியின் வழக்கைச் சாட்சிகள் மூலம் வெற்றி பெறச் செய்தபோது நான் வழக்கறிஞன். ஆனால் என் பெண்ணின் புகாரைக் கேட்டபோது அதை நான் மனச் சாட்சியுடன் பரிசீலித்தது தகப்பன் என்ற முறையில்.

''கட்சிக்காரிக்கு நான் ஒரு வழக்கறிஞன்.

''ஆனால் என் மகளுக்கோ நான் ஒரு தகப்பன்.

''கட்சிக்காரிக்கு வாதாடியதில் நியாயம் இருந்தது.

''மகளுக்காகச் சொல்லியதில் தர்மம் இருக்கிறது'' என்றார் வாஞ்சிநாதன்.

வாஞ்சிநாதன் மனத்துக்குள் முணு முணுத் துக் கொண்டார்:

''நல்ல வேளை, நான் வாதம் செய்ய எழுந்து கோர்ட் ஹாலை ஒரு நோட்டம் விட்ட போது என் பெண்ணும் மாப்பிள்ளையும் கைகோத்தபடி உள்ளே நுழைவதைப் பார்த் தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று!''

## இளமைக் கனவு

கி. மு. 1100-ல் எழுதப்பெற்ற ஹோமரின் ஈடில்லாச் சிறப்புடைய 'இலியத்', பல்வேறு உலக மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. 'இலிய'த்தில் வருணிக்கப் பெற்றுள்ள ட்ராய் நகரமும், கி.மு. 1200வாக்கில் பத்து ஆண்டுகள் இடைவிடாது நிகழ்ந்த ட்ரோஜன் யுத்தமும் வெறும் கற்பனையே என்று சமீப காலம் வரை மக்கள் எண்ணி வந்தனர்.

1829ல் ஹைன்ரிச் ஸ்லீமன் என்ற எட்டு வயது ஜெர்மானியச் சிறுவன் கண்ட கனவு நனவாகும் என்று அவரது தந்தையே நம்பவில்லை. ஹோமரின் கதாநாயகர்கள், ட்ராய் யுத்தம் பற்றியெல்லாம் மகனுக்கு விளக்கிக் கூறி மகிழ்வித்தார், தந்தை. ட்ராய் நகரம் முற்றும் உருத்தெரியாமல் அழிக்கப்பட்டதாக அவர் வருணித்தபோது சிறுவன் ஹைன்ரிச் அடைந்த வருத்தம் கூறத் தரமன்று. 'சிறுவர்களுக்கான உலக வரலாறு' என்ற நூலை 1829ம் ஆண்டு ஹென்ரிக்கு அவன் தகப்பனார் கிறிஸ்துமஸ் வெகுமதியாக வழங்கினார். ட்ராய் நகரம் பற்றி எரியும் காட்சியைச் சித்திரிக்கும் ஓவியத்தினை அந்நூலில் கண்ட ஹைன்ரிச், ''அப்பா! நீங்கள் கூறுவது தவறு. இந்த ஓவியர் ட்ராய் நகரத்தை நிச்சயம் பார்த்திருப்பார்! இல்லாவிட்டால் இந்த ஓவியத்தை அவரால் தீட்டியிருக்க முடியாது!'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூவினான். ''அது கற்பனையில் உருவான சித்திரம் மகனே!'' என்றார் தந்தை. ''இத்தகைய சுவர்கள் ஒருகாலத்தில் இருந்திருக்கக் கூடுமானால் அவை முற்றும் அழிந்து மறைந் திருக்க முடியாது. பூமிக்குள் புதையுண்டிருக்க வேண்டும்!'' என்று அறுதியிட்டுக் கூறினான் சிறுவன் ஹைன்ரிச். தந்தை அக்கருத்தினை ஏற்றுக்கொள்ளவில்லை. எத்தனையோ தொல் பொருள் ஆராய்ச்சி நிபுணர்களால் முன்பே மறுக்கப் பட்டதுதானே அது? 'எப்படியும் ஒரு நாள் பூமியைத் தோண்டிப் பார்த்துவிடுவேன்' என்று ஹைன்ரிச் செய்த முடி வைக் கேட்டுச் சிரித்தார் தந்தை.



ஹைன்ரிச்சின் தந்தைக்கு ஒன்பது குழந்தைகள். ஏழைக் குடும்பம். பதினாறு வயதிலேயே ஒரு பால் பண்ணையில் வேலைக்கு அமர்ந்தான் சிறுவன் ஹைன்ரிச். பல ஆண்டுகள் பல்வேறு உத்தியோகங்கள் பார்த்துப் படிப்படியாக முன் னேறி 1846ல் சொந்தமாகத் தொழில் புரியும் நிலைக்கு உயர்ந்தான் ஹைன்ரிச். இருபது ஆண்டுகள் உழைத்துக் கணிசமான அளவு பொருளீட்டிய பிறகு தம் இளம் பருவத் துக் கனவை நனவாக்கும் முயற்சியில் ஈடுபட்டார் ஹைன்ரிச்.

எவ்வளவோ எதிர்ப்புகள் பல திசைகளிலிருந்தும் எழுந்தன. கிரீஸ் நாட்டின் அப்பகுதி அவ்வமயம் துருக்கியின் ஆதிக்கத்தில் இருந்தது. துருக்கிய அரசாங்கம் ஹைன்ரிச்சின் நோக் கத்தைச் சந்தேகித்தது. அத்துறையில் வல்லுநர்களாயிருந்த ஐரோப்பியர்கள் யாரும் அவரது முயற்சியை ஆதரிக்கவில்லை. சோதனைகளைக் கண்டு சோர்வுறாமல், காலை ஆறு மணி முதல் மாலை பொழுது சாயும் வரை இடைவிடாது உழைத்ததன் பயனாக ஹைன்ரிச் வெற்றி கண்டார். ஹோமர் காலத்திய தங்க நகைகளையும், வெள்ளிப் பாண்டங்களையும் கண்டெடுத்தார், ஹைன்ரிச். மைசெனஸ் குன்றில் அவர் தோண்டிப் பார்த்தபொழுது, ட்ராய் நகரின் தற்காப்பு அரண்களையும் மறைந் திருந்த மாளிகைகளையும் ஆலயங்களையும் ஒவ்வொன்றாகத் தோண்டிக் கண்டு பிடித்தார்!

அதுகாறும் அவரது நம்பிக்கைகளையும் முயற்சியையும் எள்ளி நகைத்த தொல்பொருள் நிபுணர்களும் பிரமுகர்களும் இப்போது ஹைன்ரிச்சின் வெற்றியைப் போட்டி போட்டுக் கொண்டு பாராட்ட முன்வந்தனர்! அதுதானே வழக்கம்!

கிரீஸ் நாட்டில் உள்ள அக்ரோ போலிஸ் குன்றின் அடிவாரத்தில் ஹைன்ரிச்சின் நினைவாக ஒரு சமாதி அமைக்கப்பட்டுள்ளது. சில மாதங்களுக்கு முன் ஹைன்ரிச் மறைந்த 75வது ஆண்டு விழா ஜெர்மனி முழுவதும் கொண்டாடப்பெற்றது. - வி. எஸ். வெங்கடேஸ்கர் - தமிழாக்கம்: ரா. பா.



சென்னை ரவிந்து பத்திரிகை ஆசிரியரின் காரியதரிசி ஸ்ரீ ஜி. பி. தியாகராஜன் அவர்கள் குமாரத்தி சௌ. ரேவதிக்கும், சென்னை அடிஸன் & கம்பெனியைச் சார்ந்த சிரஞ்சீவி டி. ராஜகுமார் அவர்களுக்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது திருமணத்துக்கு நகரப் பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

வாழ்க மணமக்கள்!



கல்கத்தாவைச் சேர்ந்த குமாரி பவானி ராஜேந்திரனின் பரதநாட்டிய நிகழ்ச்சி ஒன்று சமீபத்தில் பொக்காரோ தமிழ் மன்றத்தின் சார்பில் பொக்காரோவில் நடைபெற்றது. இந்நிகழ்ச்சிக்கு ரஷ்யப்பிரமுகர்கள் பலர் வந்திருந்து சிறப்பித்தனர். பொக்கோரா தமிழ் மன்றத்தினரும் இதர ரசிகப் பெருமக்களும் நடன நிகழ்ச்சியை வெகுவாகப் பாராட்டினர். கல்கத்தாவில் நடனக் கலையை பயிற்றுவிக்கும் டி. ஏ. ராஜலக்ஷ்மி அவர்களின் மாணவியாவார்.




பிரெஞ்சுத் திரைப்பட விழாவின்போது சென்னை யில் ஒரேஒரு டிக்கெட்டை எழுபத்தைந்து ரூபாய்க்கு வாங்கியவர்களே சற்றுக் கேளுங்கள் :

''பிரான்ஸ் நாட்டில் 'அடல்ட்ஸ் ஒன்லி' படங்களுக்குக் கட்ட ணம் குறைவு.''

ஆதாரம் : 'நியூஸ் வீக்'
தகவல் : 'நாயக்'

## போட்டிக்கு எட்டி

''எங்கள் கோரிக்கை - புது நட்சத்திரங்கள், புது முகங்கள் வேண்டும்'' என்று அச்சடித்த போஸ் டர்களை கல்கத்தா சினிமா பார்ப்போர் சங்கம் தெருக்களில் ஒட்டி இருக் கிறது.''

'டெக்கான் ஹெரால்ட்' - 'பாபு'






## என்ன பொருத்தமோ!

கல்கத்தாவில் உள்ள ஹாரிங்டன் சாலையின் பெயரை 'ஹோ-சி-மின் சாலை' என்று மாற்றி இருக்கிறார்கள். இதில் ஒரு விசேஷம் - இந்தச் சாலையில்தான் அமெ ரிக்க, பிரிட்டிஷ் கான் சல் காரியாலயங்கள் இருக்கின்றன.

'ஹிந்து' - முத்து



## ஜாக்குலைனின் கணவர்

அரிஸ்டாடில் ஸாக்ர டீஸ் ஒனாசிஸ் எவ்வளவு பெரிய பணக்காரர் ?

£ 30,00,00,000

— இவ்வளவு பெரிய பணக்காரர்.

'டெய்லி மிர்ரர்' - 'முத்து'
பி. கு: ஒரு பவுண்டு = பதினேழு ரூபாய்.



அமெரிக்காவில் கலி போர்னியா ராஜ்யத்தில் உள்ள ஓர் நகரில், ஒரு பாங்கினுள் ஒரு நாள் ஒரு செவ்விந்தியன் நுழைந் தான். அவர்கள் இனத்துக் குரிய விசித்திர உடைகளை யும் இறகுகளாலான தலை அணியும் அணிந்து கொண் டிருந்தான். நேரே பாங்கு ஏஜண்டிடம் சென்று, ''ஐயா, எனக்கு ஐந்நூறு டாலர் கடன் தேவை. கொடுப்பீர்களா?'' என் றான். ஏஜண்டு கேட்டார்: ''உங்களை நம்பிக் கடன் தருவதற்கு என்ன ஜாமீன் வைத்திருக்கிறீர்கள்?''

உடனே செவ்விந்தியன் வெளியே சென்று இரண்டு பெரிய எருமைகளைப் பாங்கினுள் இழுத்து வந்தான். ''இதோ, என் ஜாமீன். தெருவில் இன்னும் தொண்ணூற்றெட்டு எருமைகள் உள்ளன. இடம் போதாததால் அடையாளத்துக்கு இரண்டு எருமைகளை மட்டும் இழுத்து வந்தேன்'' என்றான்.

''சரி, சரி, உடனே எருமைகளை இழுத்துப் போங்கள். இங்குள்ள விலை உயர்ந்த தரை விரிப்புகள் எல்லாம் நாசமடைகின்றன. உங்களுக்குத் தேவை யான கடனைப் பெற்றுப் போகலாம்'' என்றார் பாங்கு ஏஜண்டு.

இரண்டு மாதங்கள் சென்றன. செவ்விந்தியன் மறுபடியும் பாங்குக்கு வந்தான். தன் இடுப்புக் கச்சையிலிருந்து டாலர் நோட்டுக்களை எடுத்து ஐந்நூறு டாலர்களையும் வட்டியையும் ஏஜண்டிடம் தந்தான். அவனிடம் மேலும் ஆயிரத்தைந்நூறு டாலர்கள் இருந்தன.

''ஐயா, மீதி ஆயிரத்தைந்நூறு டாலர்களையும் என்ன செய்யப் போகிறீர்கள்? எங்கள் பாங்கி லேயே சேமிப்பாகப் போட்டு வைக்கலாமே?'' என்று சொன்னார் ஏஜண்ட்.

செவ்விந்தியன் கேட்டான். 'அப்படியானால் எத்தனை எருமைகள் ஜாமீனாக வைத்திருக் கிறீர்கள், உங்களை நம்பிப் பணத்தைக் கொடுப்ப தற்கு ?''

(சித்ரா நாராயணசாமி சென்னையில் ஒரு கூட்டத்தில் சொன்ன கதை)

அனுப்பியவர்: எஸ். மீனாக்ஷிசுந்தரம்

# கேட்டதைக் கொடுத்தால்!

• நாடோடி •



### முதல் நாள்

(சென்னையில், பெண்ணைப் பெற்றவரும், அவரது மனைவியும்.)

பெண்ணைப் பெற்றவரின் மனைவி: ஏன்னா, இந்த மாதிரி நீங்கள் ஒவ்வொருவராகத் தட்டிக் கழித்துக் கொண்டே போனால் நம் குழந்தை லலிதாவுக்குக் கலியாணம் ஆன மாதிரித்தான். இது வரை நான்கு பேர் லலிதாவை வந்து பார்த்து விட்டு, பெண் பிடித்திருக்கிறது என்று சொல்லியாகி விட்டது. இந்த நான்கு பேரிடமும் நீங்கள் லௌகிக விஷயமாக ஒத்துப் போகாமல் கல்யாணத்தை நிறுத்தி விட்டேள்.

பெ. பெ. : எப்படிக் கேட்டதைக் கொடுக்கிறது! கல்யாணத்தை ரூ. 20,000க்குள் முடிக்கணும்னு நான் கணக்குப் போட்டிருக்கிறேன். ஆனால் அவர்கள் இரட்டிப்பு அல்லவா கேட்கிறார்கள்?

பெ.பெ.ம. : எனக்கு என்னமோ, நீங்கள் அவர்கள் கேட்டதைக் கொடுத்தால்தான் குழந்தைக்குக் கலியாணம் ஆகும் என்று தோன்றுகிறது.

### இரண்டாம் நாள்

(சென்னையில், பெண்ணைப் பெற்றவர், பிள்ளையைப் பெற்ற சர்மா, அவர் பிள்ளை)

சர்மா: பெண் எங்களுக்கு மிகவும் பிடித்திருக்கிறது. லௌகிக விஷயமாக நாம் ஒத்துப் போய் விட்டால் கலியாணத்துக்கு நாள் பார்க்க வேண்டியதுதான்.

பெ.பெ. : ஆமாம், வரதட்சிணை என்ன கேட்கிறீர்கள்!

சர்மா: இதெல்லாம் நாங்கள் சொல்ல வேண்டுமா? உங்களுக்கே தெரிந்திருக்கணுமே? இப்பொழுதுதான் இதற்கெல்லாம் 'ரேட்' ஏற்பட்டு விட்டதே! பையன் என்ஜினீயராக இருப்பதால் நீங்கள் வரதட்சிணையாகக் கொடுக்க வேண்டியது பத்தாயிரம் தான் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயந்தானே!

[பெண்ணைப் பெற்றவரின் மனைவி வருகிறாள்.]

பெ.பெ.ம. : எல்லாம் நாங்களும் பத்தாயிரம்தான் கொடுப்பது என்று தீர்மானித்து வைத்திருக்கிறோம்.

பெ.பெ. புருஷர்கள் பேசிக் கொண்டிருக்கிற இந்த இடத்துக்கு உன்னை யார் வரச் சொன்னது?

சர்மா: அந்த அம்மாள் பேசுகிறதில் தப்பு ஒன்றும் இல்லையே!

பெ.பெ.ம. : நீங்களே சொல்லுங்கோ. பெண்ணைப் பெற்ற தாயாருக்குத் தன் பெண்ணுக்குக் கலியாணம் ஆகணுமே என்கிற கவலை இருக்காதா? நாங்கள் வரதட்சிணையாகப் பத்தாயிரமே கொடுக்கிறோம். மேற்கொண்டு என்ன என்ன வேண்டுமோ, கேளுங்கோ!

சர்மா: ஆமாம், மாப்பிள்ளையின் டிரஸ், கடிகாரம், வைர மோதிரம், இதெல்லாம் இதில் சேர்ந்ததில்லையே!

பெ.பெ. : எப்படிச் சேர்த்தியில்லை என்று சொல்ல முடியும்! நாங்கள் கொடுக்கும் பத்தாயிரத்தில்தான் நீங்கள்தான் மாப்பிள்ளைக்கு இதெல்லாம் வாங்கிக் கொள்ள வேண்டும்.

பெ.பெ.ம. : நீங்கள் பேசாமல் இருங்கோன்னா! பெண்ணுக்குக் கலியாணம் ஆகணுமே என்கிற கவலை இருந்தால் நீங்கள் இப்படிக் கணக்குப் பார்க்க மாட்டேள். (சர்மாவைப் பார்த்து) இதோ பாருங்கோ! இனி அவரை நீங்கள் ஒன்றும் கேட்காதேங்கோ, உங்களுக்கு என்ன வேண்டுமோ, என்னைக் கேளுங்கோ! வரதட்சிணை தவிர, மாப்பிள்ளைக்கு டிரஸ், கடிகாரம், வைர மோதிரம் எல்லாம் நாங்களே போடுகிறோம், சரிதானே!

சர்மா: வைரத்தோடு?

பெ.பெ. : வைரத்தோடு, வைரத்தோடு என்று ஒன்றும் பேசக் கூடாது. வெறும் வெள்ளைத்தோடுதான் போடுவோம்.

சர்மா: என்ன அப்படிச் சொல்றேள்! வைரத்தோடு இல்லாமல் —

பெ.பெ.ம. : யார் சொன்னா வைரத்தோடு இல்லாமல் கலியாணத்தைப் பண்ணப் போகிறோம் என்று! வைரத் தோட்டைப் பற்றி அவருக்கு என்ன தெரியும்! இரண்டு காரட்டு வைரத்தோடு போட நாங்கள் ஒப்புக் கொள்கிறோம்.

சர்மா: அப்புறம் வெள்ளிப் பாத்திரம், எவர்சில்வர் பாத்திரம் வாங்கியாகணும்! ஒவ்வொன்றிலும் குறைந்தது ஐந்நூறு ரூபாயாவது.....

பெ.பெ.ம. : அது நாங்களே தீர்மானித்து வைத்ததுதானே? — வேறு ஏதாவது....?

சர்மா: வேறு கேட்க என்ன இருக்கிறது!

பெ.பெ.ம.: கேட்க என்ன இருக்கிறதா? நீங்கள் மாமியை அழைத்துக் கொள்ளாமல் வந்து விட்டதால் உங்களுக்குக் கேட்கத் தெரியவில்லை. கட்டில் பீரோ முதலியவற்றுக்கு உங்களுக்குப் பணம் வேண்டாமா?

பெ.பெ.: ஏது, அவர்கள் கேட்காவிட்டால் கூட, நீயே கேளு என்று சொல்லிக் கொடுப்பே போலிருக்கிறதே!

பெ.பெ.ம. : பின் பெண்ணுக்குக் கலியாயாணம் ஆகணும் என்றால் அவர்கள் கேட்டதைக் கொடுத்துத்தானே ஆகவேண்டும் !

பெ.பெ. : சரி, நீங்கள் கேட்டதைக் கொடுப்பது என்று என் மனைவியே தீர்மானித்து விட்டால், கலியாணத்துக்கு நான் பார்க்க வேண்டியதுதானே !

சர்மா: பார்க்க வேண்டியதுதான். எதற்கும் நான் ஊருக்குப் போய் என் மனைவியையும் ஒரு வார்த்தை கேட்டுக் கொண்டு உங்களுக்கு எழுதுகிறேன்.

## மூன்றும் நாள்

(சென்னையில். பெண்ணைப் பெற்றவரும் அவர் மனைவியும்.)

பெ.பெ. : உன்னை யார் நேற்று பேச வரச் சொன்னது ! நீ மாட்டில் அவர்கள் கேட்டதையெல்லாம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டு விட்டு, கல்யாண பட்ஜெட்டை நாற்பதாயிரம் ரூபாய்க்குக் கொண்டு வந்து விட்டாயே !

பெ.பெ.ம. : ஏன்னு, பெண் பார்க்க வந்த ஒவ்வொருவரிடமும் நீங்கள் கண்டிப்பாகப் பேசிக் கலியாணம் நடக்கவொட்டாமல் செய்து விட்டீர்களே என்றுதான், நான் இந்தத் தடவை புகுந்து பேசுவது என்று தீர்மானித்தேன். நாளைக்குச் 'சம்பந்தம்'னு கடிதம் வரும் பாருங்கோ !

## பதின்றும் நாள்

(சென்னையில் பெண்ணைப் பெற்றவரும், அவர் மனைவியும்.)

பெ.பெ.ம. : என்னன்னு ! பதின்மூன்று நாட்கள் ஆகப் போகின்றன ! நான்கு கடிதங்கள் எழுதியாகி விட்டது. அவர்களிடமிருந்து ஒரு பதிலையும் காணுமே !

பெ.பெ. : எனக்கே ஒன்றும் புரியவில்லை. அத்தனைக்கும் அவர்கள் கேட்டதை யெல்லாம் நீ கொடுப்பதாகச் சொன்னே !

பெ.பெ.ம. : எனக்கு ஒன்று தோன்றுகிறது. நாளை ராத்திரி வண்டி ஏறி நாம் இருவரும் பங்களூர் போய் நேரிலேயே கேட்டுவிட்டு வந்தால் என்ன?

## இருபதாம் நாள்

(பங்களூரில். சர்மாவும், அவர் மனைவியும். அவர்கள் பேசிக் கொள்வதை அப்பொழுது என்று வந்த பெண்ணைப் பெற்றவரும், அவர் மனைவியும் வாசல் திண்ணையில் நின்றுகொண்டு ஒட்டுக் கேட்கிறார்கள்.)

சர்மாவின் மனைவி: என்ன, அவர்கள் எத்தனை தடவைதான் உங்களுக்குக் கடிதம் எழுதுவா ? பெண் பிடிக்கலேன்னு, பிடிக்கலேன்னு எழுதி விடுகிறதுதானே !

சர்மா: பெண் பிடிக்கலேன்னு எப்படி எழுதுகிறது ! பெண் பார்க்கிறதுக்கு நன்றாகத்தான் இருக்கிறாள். பீ. ஏ. பாஸ் பண்ணியிருக்கிறாள், நன்றாகப் பாடுகிறாள். வீட்டுக் காரியமும் தெரியுமாம்.

ச.ம. : பின் ஏன், அந்தப் பெண் வேண்டாம் என்று சொல்றேள் !

சர்மா: எத்தனை தடவை நான் சொல்லுகிறது ! எனக்கு என்னவோ, அந்தப் பெண் விஷயத்தில் எதையோ மூடி மறைக்கப் பார்க்கிறார்கள் என்று தோன்றுகிறது. பெண்ணுக்கு என்ன ஊனமோ, அல்லது ஏதாவது கெட்ட பெயரோ என்னவென்று தெரியவில்லை.

ச.ம. : எதற்காக அப்படிச் சொல்றேள்?

சர்மா : பின் இல்லாவிடில், அந்த அம்மாள், தன் கணவனையும் மீறிக் கொண்டு, நான் கேட்டதற்கெல்லாம் சரி சரி என்று சொல்லுவாளா ?

ச.ம. : அப்படியா சொன்னாள் ?

சர்மா: அப்படித்தான் சொன்னாள். அது தான் எனக்குச் சந்தேகத்தைக் கிளப்பி விட்டு விட்டது. அதோடு அந்தப் பெண்ணை இது வரை நான்கு பேர் பார்த்து விட்டுப் போய் நான்கு இடத்திலும் கலியாணம் நிச்சயமாகவில்லை.

ச.ம. : வைதிகம் ஒத்துக் கொள்ளாததால்தான் நடக்கவில்லையோ, என்னமோ !

சர்மா: அப்படித்தான் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் அதில் எனக்கு நம்பிக்கையில்லை. நமக்குக் கேட்டதை யெல்லாம் கொடுக்கிறேன் என்று சொன்னவர்கள்



அவர்களுக்கும் அப்படித்தானே சொல்லியிருப்பார்கள் ! ஆகவே, பெண் விஷயமாகத்தான் ஏதோ சந்தேகத்துக்கு இடம் இருக்கிறது என்று தோன்றுகிறது.

ச.ம. : அப்படிச் சந்தேகம் உள்ள இடத்தில் நாம் கண்ணை மூடிக் கொண்டு போய் விழுவானேன் ! நம் பிள்ளைக்குப் பெண்ணு கிடைக்காது ? எதற்கும் நீங்கள் அவர்களுக்கு, "சகுனம் ஆகல்லே" என்று சொல்லி ஒரு கார்டு போட்டுடுங்கோ !

## வாசல் திண்ணையில்

பெ.பெ. : இப்ப என்ன சொல்லறே ! கேட்டதைக் கொடுத்தால் கல்யாணம் நடந்து விடும் என்று சொன்னுயே !

பெ.பெ.ம. : எனக்கு ஒன்றும் புரியல்லே. தலையைச் சுற்றுகிறது.

பெ.பெ. : இங்கே மயக்கமாக விழுந்து விடாதே ! அவர்கள் பார்த்துவிட்டுப் போகிறார்கள் ! போகலாம், ஊரில் வந்து விழு!



# திருடன் வந்தான்!

குறும்பன்

மணி பன்னிரண்டு அடித்து விட்டது. அவரவர்கள் ஊர் வம்பை முடித்துக் கொண்டு படுக்கை போட்டு அரை மணியாகியிருக்கும். அரை குறைத் தூக்கத்தில் அவர்கள் புரண்டு கொண்டிருந்த பொழுது கோடி வீட்டுக் குப்புசாமியின் வீட்டிலிருந்து ஊளைச் சத்தம் கேட்டது. தொடர்ந்து உளறியடித்துக் கொண்டு குப்புசாமி எழுந்து, 'திருடன், திருடன்!' என்று நாக் குழற வாய் குழறக் கூவியதும் கேட்டது.

தூக்கம் கவிந்த கண்களுடன், கையில் டார்ச்சும், தடியுமாகப் பலர் அவன் வீட்டை நோக்கி ஓடினர். நடுங்கியவாறே நின்ற குப்புசாமி, 'அதோ, அதோ' என்று கையைக் காட்டினான். அவன் காட்டிய திசையில் ஓடியவர்கள் ஊரையே ஒரு சுற்றுச் சுற்றி விட்டு அவன் வீட்டுக்கே வந்தனர். ஆனால் திருடன் அகப்படவில்லை.

''என்னடா! சொப்பனம் — கிப்பனம் கண்டாயா?''

''இல்லை, நிஜமாகப் பார்த்தேன்!''

''இருக்கவே முடியாது! நாங்கள் சல்லடை போட்டுச் சலித்து விட்டோம், மூலை—முடுக்கு விடாமல்! ஆள் வந்து போனதற்கு ஒரு தடயமும் காணோமே!'' என்று மறுத்தார் அண்ணாசாமி.

''ஏண்டா, பேயறைந்தாற்போல் உன் வீட்டுத் திண்ணையிலேயே உட்கார்ந்து விட்டாயே! உண்மையில் பார்த்திருந்தால், எங்களோடு தேட வருவதற்கு என்னடா?'' என்று கேட்டான் சாமா.

குப்புசாமியின் குலை நடுக்கம் அப்பொழுதும் தீர்ந்தபாடில்லை.

''நிசமாக இவன் கனவுதான்டா கண்டிருக்கிறான். தினமும் பத்திரிகைகளில் வெளி வரும் கொள்ளை — களவுச் செய்திகளை விடாமல் படிப்பவனாயிற்றே இவன்! திருவான்மியூர் — அண்ணா நகர் நிகழ்ச்சிகளையெல்லாம் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளைப் போல் மனப்பாடம் செய்து ஒப்புவிப்பவனாயிற்றே! இவற்றை நினைத்துக் கொண்டு படுத்திருந்திருப்பான். அது கனவா....''

''இல்லவே, இல்லை!''

''என்ன தொல்லை?''

இப்படிக் கேட்டுவிட்டு எல்லாரும் எழுந்தனர், படுக்கச் செல்லும் நோக்கத்துடன்.

''என் கண்களாலேயே பார்த்தேன்டா! ஆள் எப்படியிருந்தான் தெரியுமா? ராக்ஷஸன் மாதிரி. அவன் மீசை ஒன்றே போதும்...''

''எதற்கு? பயப்படவா?''

'இத்தனை பேர் இருக்கும் பொழுது என்னடா பயம்? நான் சொல்வதைக் கேளுங்கடா. அரவம் கேட்டு ஆள் எங்கேயோ பதுங்கிக் கொ[illegible]. கண் அயர்ந்து விட்டால் குடிகெட்டு விடும்! இன்று ஒருநாள் தூங்க வேண்டாம்!'' என்றான் குப்புசாமி.

''அப்படியே நிஜமாக ஆள் வந்திருந்தாலும், இன்றைக்கு இனி மேல் தன் கைவரிசையைக் காட்டமாட்டான். எல்லாரும் விழிப்பாயிருப்பார்கள் என்று போய் விடுவான். அதனால் பேசாமல் போய்ப் படுத்துத் தூங்கு. நாங்களும் வருகிறோம்!''

இப்படிக் கூறியவர்களைக் குப்புசாமி எழுந்திருக்க விடவில்லை. இராக்கண் விழிக்க வைத்து விட்டான். யாராவது தூங்கி விழுந்தால் தட்டி எழுப்பி உட்கார வைத்தான்.

மணி ஒன்று இரண்டு என்று ஆறு அடித்தது. வீட்டுப் பெண்கள் வாசலுக்குச் சாணம் தெளிக்க வந்தனர். அப்புறம்தான் குப்புசாமி தன் நண்பர்களுக்கு ஓய்வு கொடுத்தான். 'நல்ல பயங்கொள்ளியடா!' என்று சொல்லி அவர்களும் விடைபெற்றார்கள், விழிகளில் தூக்கத்தைத் தேக்கியவர்களாக.

குப்புசாமியோ தூங்காமல், காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, குளித்துக் காப்பி சாப்பிட்டு முடித்து விட்டுக் கையில் தோல் பையுடன் புறப்பட்டான்.

பைச் சுமையைக் குறைத்தபின்தான் அவன் மனத்துக்கு நிம்மதி பிறந்தது. வீட்டுக்கு வந்து சாப்பிட்டு விட்டுத் தூங்கப் படுத்தவன் அடித்துப் போட்டாற்போலத் தூங்கினான். சாயந்திரம் ஆறு மணிக்குத் தான் விழித்தெழுந்தான்.

''என்னடா, குப்புசாமி! நேற்று ஊரைக் கூட்டி விட்டாயே! இன்றைக்கும் அப்படி ஏதாவது செய்து வைக்காதே!'' என்று கூறிக் கொண்டே திண்ணை வம்புக்கு வந்தார் அண்ணாசாமி.

''எனக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? மடியிலே கனம் இருந்தால் அல்லவா வழியிலே பயம்? நேற்றுச் சாயந்திரம் கூத்தனூர் கோவிந்தசாமி கொண்டு வந்து புரோ நோட்டுக்கு வரவு வைத்துச் சென்றானே, ஆறாயிரம் ரூபாய்! அது மடியிலே கனத்தது! இப்போதுதான் எங்கு பார்த்தாலும் திருட்டுப் பயமாயிருக்கா?—அதனாலே பயந்தேன். காலையிலே எழுந்ததும் முதல் காரியமாகப் பணத்தைப் பாங்கியிலே கொண்டு போய்க் கட்டிவிட்டு வந்துவிட்டேன்! இனி என்ன பயம்?'' என்றான்.

''அட, பலே ஆளடா நீ!''

அண்ணாசாமி அப்படிக் கூறியபொழுது இரவுமணி ஒன்பது அடித்தது. ஆகாச வாணியின் செய்தி அறிக்கை தொடர்ந்தது:

''பதினான்கு பாங்குகள் அவசரச் சட்டம் மூலம் தேச உடைமையாக்கப்படுகின்றன!''

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4399
Registered as a Newspaper in Ceylon